

# கிடுகு வேங்கடராமமூர்த்தி

எச். எஸ். பிரம்மாநந்தா



இந்திய
இலக்கியச்
சிற்பிகள்

உள் அட்டையில் காணும் சிற்பக் காட்சியில், பகவான் புத்தரின் அன்னை மாயாதேவி கண்ட கனவின் பலனை, மன்னர் சுதோதனருக்கு நிமித்திகர் மூவர் விளக்குகின்றனர். அவர்களுக்குக் கீழே அமர்ந்து அந்த விளக்கத்தை எழுதுகிறார் ஓர் எழுத்தர். எழுதும் கலையைச் சித்தரிக்கும் முதல் இந்தியச் சிற்பம் இதுவாகவே இருக்கலாம்.

(நாகார்ஜுன மலைச்சிற்பம் கி.பி. இரண்டாம் நூற்றாண்டு.
பட உதவி: நேஷனல் மியூசியம், புதுதில்லி)

**இந்திய இலக்கியச் சிற்பிகள்**

# கிடுகு வேங்கடராமமூர்த்தி

*தெலுங்கு மூலம்*

எச். எஸ். பிரம்மாநந்தா

*தமிழில்*

என். தட்சிணாமூர்த்தி அய்யா



**சாகித்திய அக்காதெமி**

GIDUGU VENKATARAMAMOORTHI
Translation by N. Dhakshinamurthy Aiyah
of H. S. Brahmananda's Telugu monograph.
Sahitya Akademi, New Delhi. Rs. 25.


முதல் வெளியீடு : 1998
ISBN - 81 - 260 - 0587 - 4

சாகித்திய அக்காதெமி

தலைமை அலுவலகம்:
ரவீந்திர பவன், 35, பெரோஸ்ஷா சாலை,
புது தில்லி 110 001.

விற்பனை:
'ஸ்வாதி' மந்திர் சாலை, புது தில்லி 110 001.
109, ஜே.ஸி. சாலை, பெங்களூர் 560 002.
'குணா பில்டிங்' 304-305, அண்ணா சாலை,
தேனாம்பேட்டை, சென்னை 600 018.
ஜீவன் தாரா பில்டிங், 4வது மாடி,
டைமண்ட் ஹார்பர் சாலை, கல்கத்தா 700 053.
172, பம்பாய் மராத்தி கிரந்த சங்கிரகாலய சாலை,
தாதர், பம்பாய் 400 014.

விலை ரூ.25

அச்சிட்டோர்: வெல்டன் பிரஸ், சென்னை - 21.

# பொருளடக்கம்

# நன்றியுணர்வு

இவ்விலக்கியப் படைப்பின் வாயிலாக கிடுகு அவர்களின் பணியை நினைவு கூர்வதற்கு வாய்ப்பினை அளித்த சாகித்திய அக்காதெமி செயலர் பேராசிரியர் இந்திரநாத் சௌதுரி அவர்களுக்கு,

எனது மொழி இலக்கிய உரையாக்கத்திற்கு வழிகாட்டியுணர்த்திய பேராசிரியர்கள் பத்ரராஜு கிருஷ்ணமூர்த்தி, ஜி. என் ரெட்டி, டி. கோடேஸ்வர ராவ், சேகூரி ராமாராவ் ஆகியோருக்கு,

கிடுகு அவர்களின் பணி நாட்டிற்குத் தெளிவுறத் தெரியவேண்டுமென ஏங்கி, ஆவல் நிறைவேறாமலேயே அகால மரணமடைந்த டில்லி நண்பர் டாக்டர் காபூரி ரமேஷ் அவர்களுக்கு,

தமது செய்தித் தொகுப்பினை மனமுவந்தளித்த சீரிய நண்பர் ஸ்ரீபாதவல்லி சந்திரசேகர் அவர்களுக்கு,

என் துணைவியார் அவதானம் நிர்மலாவுக்கு

இதயம் நிறைந்த நன்றியுடன்

பிரம்மாநந்தா

அனந்தபுரம்,

31-8-1987.

# வழிகாட்டி

ராமமூர்த்தி அவர்கள் தெலுங்கு மொழி இலக்கியங்களுக்கு இந்நூற்றாண்டில் ஒரு புதிய வடிவமைத்த பேராளர். பதினோராம் நூற்றாண்டில் நன்னய நாராயண பட்டர் செய்த படைப்புமுறை தெலுங்கில் பாரதத்தை எழுதியது, இந்நூற்றாண்டில் 'கிராமியம்' என விளக்கப் பெற்ற ஆய்வினை இலட்சியம் இலக்கணம் என உருவாக்கிக் காவியப் பயனீடாக மாற்றிய குருஜாடா மற்றும் கிடுகு இருவரும் 'இரட்டைச் சொல்'லெனப் பகுக்கவியலாத தொடர்புடைய தற்கால மேதைகளாவர்.

ராமமூர்த்தி அவர்கள் சித்தாந்தப் பாங்கில் தெளிவுறக் காட்டிய செய்தி தெலுங்கு மொழியில் தமிழ் மொழியைப் போல் இரு மொழி நிலை (diglossia) யென்றெனா, நடைமுறை மொழிப் பயன்பாட்டைப் புரட்சி நிலையில் பிரசாரம் செய்தார்கள்.

இந்நூலில் ராமமூர்த்தி அவர்களின் சவர மொழி ஆராய்ச்சிகளை விரிவாக விளக்குகிறேன். மொத்தத்தில் பாரத நாடு முழுவதற்கும் வாழ் மக்களின் சோதனைகளுக்கும் உரிய படிமம் ஆக்கித் தந்த கிடுகு அவர்களின் பணியை இந்திய மொழிகள் அனைத்திலும் தெரியச் செய்ய வேண்டிய தேவை உள்ளது.

அதற்காகவே ராமமூர்த்தி அவர்கள் தமது தொலைநோக்கு வாயிலாக வரும் நூற்றாண்டிலும் கூட அறிந்தவராகின்றார். அவர் மொழி இலக்கிய ஆராய்ச்சியாளருக்கு ஒரு வழிகாட்டி.

# அத்தியாயம் ஒன்று

## வாழ்க்கைத் தொகுப்பு

கிடுகு வேங்கட ராமமூர்த்தியின் மூதாதையர் ஆந்திர நாட்டில் கோதாவரி மாவட்டம் அமலாபுரம் வட்டம் இந்து பல்லியிலிருந்தார்கள். கிடுகு அவர்களின் வம்சத்தில் ஒருவரான கிடுகு வீரராஜு அவர்கள் விசாகப்பட்டினம் மாவட்டத்திற்கு வந்து விஜய நகர சமஸ்தானத்தில் "சமுத்தார்" (வருமானத்துறைக் கண்காணிப்பாளர்) பணியில் சேர்ந்தார். பணியின் காரணமாக 1860-75 ஆம் ஆண்டுகளுக்கிடையில் அவர் ஸ்ரீகாகுளம் பகுதியில் இருந்தார். அம்மாவட்டத்தில் முகலிங்கம் புகழ் பெற்ற சிவஸ்தலம். அதற்கு இரண்டு மைல் தொலைவில் பர்வதால பேட்டை எனும் ஊர் உள்ளது.

அந்தக் கிராமத்தில் 1863 ஆகஸ்ட் 29-ஆம் நாள் ராமமூர்த்தி பிறந்தார். அவ்வூருக்கருகில் வம்சதாரா நதி பாய்கிறது. அந்நதிக்கு அடுத்த கரையில் ஜெய்பூர் சமஸ்தான அரசரின் நகரிகடகம் எனும் ஊரிலிருந்து வந்தவர். அந்நாட்களில் அப்பிரமுகரிடம் நெருக்கமான வீரராஜு பந்துலுக்கு அளவுகடந்த தொடர்பு இருந்துவந்தது. அதனால் பந்துலு அவ்வரச குடும்பத்துடன் நட்பு கொண்டாடி அனைவருடனும் அக்கறை கொண்டிருந்தார். ராமமூர்த்தி பிறந்த நான்காண்டுகளில் விக்ரமதேவ வர்மா (1867-1952) பிறந்தார். வாழ் நாள் முழுமையும் உயிர்த் தோழர்களாக இருந்த ராமமூர்த்தி விக்ரம தேவ வர்மா வம்ச தாரா நதிக்கரையிலே தம் இளமைக் காலத்தைக் கடத்தினர்.

வீரராஜுவின் மனைவி வெங்கம்மாவின் சொந்த ஊர் விஜயநகரம். போரூரி சீதாபதியார் மகள். ராமமூர்த்தி பிறந்தபின் மகளிர் இருவர் பிறந்தனர். அந்நாட்களின் மரபு நெறிப்படியே ஐந்தாம் ஆண்டு ஐந்தாம் மாதம் ஐந்தாம் நாளன்று ராமமூர்த்திக்கு எழுத்தறிவித்தல் செய்வித்தனர். கோனபாடியிலிருந்து வாரணாசி குன்னய்ய பந்துலு எனும் ஆசிரியர் வந்து ராமமூர்த்திக்கு சமஸ்கிருதம், தெலுங்கு, கணிதம்

கற்றுத் தந்தார். நுண்ணறிவும் இயல்புக்கு மேலான திறமையுமுள்ள ராமமூர்த்தி “சப்தமஞ்சரி”யை எட்டாண்டுக்குள் கற்றுத் தேர்ந்தார். ஓய்ந்திருக்கும் போதெல்லாம் வீரராஜு அவர்களே மகனை அருகில் அமரச் செய்து பாலராமாயணப் பாடல்களையும் பாரத பாகவதக் கவிதைகளையும் படிக்கச் செய்து வந்தார். தாயார் உறங்கப் போகும்முன் புராணக்கதைகளை இனிமையாகச் சொல்வார்.

1874 ஆம் ஆண்டில் ராமமூர்த்திக்கு விஜயநகரத்தில் உபநயனம் நிகழ்ந்தது. சடங்கு முறைக்கேற்ப ராமமூர்த்தி பிட்சை எடுத்தார். சந்தியாவந்தன முறைகளைக் கற்றார். ஒருநாள் மகன் சந்தியாவந்தனம் செய்யாமையறிந்து வீரராஜு கடுமையாகக் கண்டித்தார். பின்னாட்களில் ராமமூர்த்தி தெய்வ வழிபாட்டினை நிறுத்திவிட்டார். ஆயினும் வாழ்நாள் முழுமையும் சந்தியாவந்தனத்தை மட்டும் நிறுத்தவில்லை.

1875 ஆம் ஆண்டில் பந்துலுக்குச் சோடவரத்துக்கு மாற்றமாயிற்று. மனைவி மட்டும் விஜய நகரத்திலேயே இருந்தார். சில மாதங்கள் கழிந்தன. வீரராஜு எதிர்பாராதவாறு இறந்து போனார். வெங்கம்மாவுக்குக் குடும்பம் எப்படி நடக்குமோ எனப்புரியவில்லை. இந்துபல்லியில் தென்னந் தோப்பு உள்ளது பேச்சுக்குதானன்றி அதனால் வருமானம் ஏதுமில்லை. வீரராஜு பந்துலு சமஸ்தானத்துக்கு எத்தனையோ வருவாயைக் காட்டிப் பணிபுரிந்தமையால் அப்பகுதியிலிருந்த சித்தாந்தம் துரை அங்கு அருகாமையிலிருந்த மாதலபுபேட்டை இனாம் பூமி ஒன்றினை சமஸ்தானத்தின் ஒப்புதல் பெற்று தானம் செய்திருந்தார். ஆனால் இந்தச் செய்தியறியாத வெங்கம்மா தான் அணிந்திருந்த நகைகளையெல்லாம் விற்றுக் குழந்தைகளைக் காப்பாற்றலானார்.

ராமமூர்த்தி சுறுசுறுப்பான சிறுவனெனப் பெயர் பெற்றுக் கொண்டான். பக்கத்து வீட்டிலிருந்த காள்ளகூரி விஸ்வாதம் ராமமூர்த்தியை அழைத்து ஆங்கிலம் கற்பித்தார். அவ்வாண்டே ராமமூர்த்தி மகாராஜாவின் கல்லூரியில் சேர்ந்தார். முதனிலை நான்காவது, மேனிலை நான்காவது, ஐந்தாவது, பத்தாம் வகுப்பு என அங்கேயே படித்தார். அப்போது சந்திரசேகரம் அவர்கள் கல்லூரி முதல்வர். அவர் சிறந்த சமஸ்கிருத அறிஞர். அவரில்லத்தில்தான் குரஜாடா அப்பாராவ் எனும் மற்றொரு சிறுவனுடன் ராமமூர்த்திக்கு அறிமுகமாயிற்று. மெலிந்து ஈர்க்கங்குச்சி போன்றிருந்த அப்பாராவ் மீது ராமமூர்த்திக்கு மதிப்பும் பற்றும் ஏற்பட்டன. ஓராண்டு தன்னைவிடப்

பெரியவனாயினும், பார்ப்பதற்கு மட்டும் தம்பி போலக் காணும் அப்பாராவ் உதவியுடன் ராமமூர்த்தி தன் தேவையைப் பூர்த்தி செய்து கொள்வான்.

அந்த நாட்களில் ராமமூர்த்தியுடன் படித்த மற்றும் சில சிறுவர்கள் பிற்காலத்தில் பெரும் புகழ் பெற்றவர்களாயினர். மகராஜா கல்லூரி தோற்றுவித்த வரலாறு அது. கேசரி காமேஸ்வரராவ், புர்ரா பார்வதீசம், ஆதிபட்ட சூர்யநாராயணா, கிடுகு, குரஜாடாவின் உயிர்த் தோழர்களாயினர். சூர்யநாராயணா இசையார்வமிக்கவன். அப்பாராவ் கவிதைகள் புனைபவன். ராமமூர்த்தி மிகவும் அக்கறையான மாணாக்கன். பொறுப்புடன் படிப்பவன்.

ஆனால் மிகவும் அப்பாவியாக இருந்தான். மாலைப் பொழுதில் ராமமூர்த்தி அப்பாராவுடன் வெளியில் திரியச் செல்வான். விஜயநகரத்துக்கு வெளியில் நெடுந்தூரம் சென்று திரிந்த பொழுது ஒருமுறை அப்பாராவ் தான் மேகமல்லாரி ராகம் பாடினால் மழை தவறாமல் வரும் என்று பாடினான். அது என்ன வியப்போ உண்மையிலேயே மழை பொழிந்தது. சில நாட்கள் கழிந்த பின்னர் நண்பனின் திறமையைச் சோதிக்க வேண்டுமென, “ஊம்! சரி, இப்போது பாடு!” என வேண்டினான். அப்பாராவ் வானை நிமிர்ந்து பார்த்தான். மேகங்கள் இல்லை. இனிப்பாடிப் பயனில்லை. ஆனால் அப்பாராவ் உத்தண்டி பிண்டம் பாடினான். ஆனால் மழை மட்டும் வரவில்லை. ராமமூர்த்தி முகத்தில் புன்னகை தவழத் தொடங்கியது. அதற்குள் அப்பாராவ் சொன்னான்: “பார்த்தாயா! என்னை விட நல்ல பாடகன் எவனோ வேறெங்கோ பாடுகிறான். அதனால்தான் மேகங்கள் அந்தப் பக்கமாகப் போய்விட்டன” என்றான்.

ராமமூர்த்தி என்ன சொல்வான்? ஆமாம் அப்படித்தான் எனத் தலையசைத்தான். இவ்வாறாக வளர்ச்சியடைந்த நட்பு வாழ்நாள் முடியும்வரை தொடர்ந்திருந்தது.

1879இல் ராமமூர்த்தி அப்பாராவ் இருவரும் பத்தாம் வகுப்பில் ஒரே தடவையில் தேர்ச்சி பெற்றனர். அப்பாராவ் மேல்படிப்புத் தொடரவிருப்பதாகச் சொன்னான். ராமமூர்த்திக்கும் படிப்பைத் தவிர்ப்பதென்பது தப்பவில்லை. விசாகப்பட்டினத்தில் ஆட்சியர் அலுவலகத்தில் உதவியாளனாகப் பணியில் சேர்ந்தான்.

இதற்கிடையில் வெங்கம்மா மகனை மணம் செய்து கொள்ள வற்புறுத்தினார். அவ்வாண்டிலேயே (1879)

கந்திகொண்ட ராமதாசுவின் மகள் அன்னபூர்ணாவுடன் ராமமூர்த்தியின் மணம் எளிய முறையில் நடந்தேறியது. ராமதாசு அவர்களும் நல்லநிலையிலிருந்தவரே. பீமாபட்டினத்தில் படகு வியாபாரத்தில் உரிமை பெற்றிருந்த அவர் அப்பகுதியில் நல்ல பெயருள்ளவருங்கூட.

இவ்வாறிருக்கையில் 1880இல் கல்வி ஆய்வாளர் இவ்விரண்டு வேலைகளில் எது வேண்டுமெனக் கேட்டார். விஜயநகரத்துக்கு அருகிலுள்ள கோனாடா கிராமத்தில் இருபத்தைந்து ரூபாய்க்குக் கல்விக்கூட ஆசிரியர் பணி. மற்றொன்று எங்கோ தொலைவில் காணாவிடத்தில் முப்பது ரூபாயில் ஆசிரியர் பணி. அந்நாட்களில் ஐந்து ரூபாய் அதிகமாகக் கிடைப்பதென்பது பெரிய நிகழ்ச்சி. அதனால் பர்லாகிமிடிக்குச் சென்று பணி செய்யலானார். எந்த வேலையில் பர்லாகிமிடி போய்ச் சேர்ந்தாரோ, ஐம்பத்தாறாண்டுகள் அங்கேயே நிலையாகக் குடியமைத்துக் கொண்டார். சற்று செல்வமும் சேர்த்துக் கொண்டார்.

ஒருபுறம் உதவி ஆசிரியராகப் பணி, மற்றொரு புறம் குடும்பப் பொறுப்பு. தங்கைகளுக்கு மணவினைகள் செய்யவேண்டும். மூன்று நான்காண்டுகள் பணிபுரிந்து நான்கு காசு சேர்த்து அவர்களின் மணத்தை முடித்தார். சற்று நிலை பெறலானார். அப்பாராவ் மட்டும் இத்தனை ஆண்டுகள் விஜய நகரத்திலேயே இருந்து படிப்பை முடித்தார்.

அன்னபூர்ணம்மா குடும்பத்தை நடத்தினாள். மகப்பேறுக்காக ராமமூர்த்தி மனைவியை பீமாபட்டினத்துக்கு அழைத்துச் சென்றார். தாத்தா வீட்டில் 1885 ஜனவரி 28 ஆம் நாள் ஒரு மகன் பிறந்தான். தமது குல தெய்வத்தின் பெயர் இணையுமாறு வேங்கட சீதாபதி என்ற பெயரை வைத்தார்.

1886இல் அப்பாராவ் பி. ஏ. தேர்வடைந்து 1887இல் விஜயநகரம் கல்லூரியில் வரலாற்றாசிரியர் பணியில் சேர்ந்தார். ராமமூர்த்திக்கு மட்டும் படிப்பு சரியாக அமையவில்லை. அப்படி இப்படி துயரப்பட்டு எஃப்.ஏ. 1887இல் தேர்வு பெற்றார். துணைப்பதிவாளர் பதவிக்கு விண்ணப்பித்தார். வேலை யென்னமோ கிடைத்தது. ஆயினும் வெங்கம்மாவுக்கு விருப்பமில்லாமையால் விட்டுவிட்டார். மேலும் சில மாதங்களில் அவ்வம்மையாரும் இறந்து போனார்.

சீதாபதி பிறந்தபின் மற்றொரு மகனும் பிறந்தான். வீரராஜு எனப்பெயரிட்டனர். பன்னிரண்டாண்டில் மற்றொரு மகன். ராமதாஸ் என்று பெயர்.

இதற்கிடையில் ராமமூர்த்திக்கு, பர்லாகிமிடி சுற்றிலும் மாளுவ மலைப்பகுதிகளில் வாழ்ந்து வரும் "சவர"இன மக்களுடன் அறிமுகம் ஏற்பட்டது. அவர்களது கள்ளமற்ற தன்மை, பின் தங்கிய நிலைமையில் அவருள்ளத்தில் கவலை பிறந்தது. ஆண்கள் கோவணம் தவிர வேறு ஆடைகள் அறியார். பெண்கள் இடுப்பைச் சுற்றி மட்டும் ஒரு துணியைக் கட்டியிருப்பார்கள். பணத்தைக் கணக்குப் பார்க்கவும் தெரியாது. வாராவாரம் நடக்கும் சந்தைக்கு மட்டும் பர்லாகிமிடிக்கு வந்து சென்று கொண்டிருக்கையில் அவர்களின் பண்பாடுகளின் மீதும் மொழியின் மீதும் ராமமூர்த்திக்கு ஆர்வம் பிறந்தது. இவ்வாறாக மூன்றாண்டுகள் கடந்தன. பி.ஏ. யில் ஆங்கிலம், சமஸ்கிருதம் பாகங்களில் தேர்வடைந்தார்.

1892இல் அன்னபூர்ணம்மா தனது இரண்டு குழந்தைகளுடன் மீண்டும் பிள்ளைப் பேறுக்காக பீமாபட்டினம் சென்றார். ராமமூர்த்தியைக் கல்விக் கூடத்திலிருந்து, ராஜா அவர்களின் தம்பி பத்மநாராயண தேவுக்கு போதகராக அமர்த்தினார்கள். இவரின் இடத்தில் அந்தக் கல்லூரியின் தலைமைப் பேராசிரியரின் தம்பியை நியமித்தார்கள்.

ராஜா அவர்களின் தம்பிக்கு ராமமூர்த்தியின் மீது மிகுந்த பற்று. அவரிடம் பெரிய நூலகம் இருந்ததது. பி.ஏ.யில் வரலாற்றுப் பகுதி தேர்ச்சியடைய வேண்டுமாகையால் சூயல் அறிஞரின் பட்டியல் முதல் வரலாறு என்று வந்த அத்தனைப் புத்தகங்களைப் படிப்பதற்கென ராமமூர்த்திக்கு பர்னல் அறிஞரின் தென்னிந்திய கற்கால ஆராய்ச்சி நூலை வரவழைத்துத் தந்தார். செப்பேடுகளைப் படித்தறியக் கற்றுக் கொண்டார். அங்கே அப்பாராவுக்கும் இங்கே ராமமூர்த்திக்கும் களிங்க வரலாற்றின் மீது ஆர்வம் பிறந்தது.

இதற்கிடையில் ஓரிரண்டு நிகழ்ச்சிகள் நேர்ந்தன. தனக்கும் பன்னிரண்டாண்டுச் சேவை இருப்பினும் பி.ஏ. முடிக்க வில்லையென்ற குறையுடன் தன்னைவிட வயதில் இளையவரைத் தன் மேலதிகாரியாக நியமிப்பது ராமமூர்த்திக்கு விருப்பமில்லை. பட்டப்படிப்புக்கெனச் சென்னைப் பட்டினம் செல்ல வேண்டுமென ஊதியமிழந்து ஓராண்டு விடுப்பு தரவேண்டுமெனக் கோரினார். பயணத்துக்கான ஏற்பாடுகள் கூட முடிந்திருந்தன. இதெல்லாம் 1892-93இல் நடந்த நிகழ்ச்சிகள்.

இதற்குள் சங்கராந்தி வந்தது. பத்மநாராயண தேவுக்குப் பாடம் போதித்துக் கொண்டிருந்தார். பண்டிகையன்று கூட,

பாடம் நடத்துவதை விடும் வழக்கம் அவரிடமில்லாத செயல். அப்பொழுது ராஜா அவர்களின் ஏவலர்கள் நெருப்பிட்ட கும்மட்டி, சரக்குப் பை தைக்கும் குத்தூசியைக் கொண்டு வந்தார்கள். ஆஸ்தானத்தில் வேலை செய்யும் அனைவருக்கும் இரண்டு சூடுகள் போடவேண்டுமென்று அரசர் ஆணை எனத் தெரிவித்தார்கள்.

"இங்குள்ள அரசமரியாதை நன்றாகவே உள்ளது. பிற சமஸ்தானங்களில் பண்டிகைக்கு அலுவலர்களுக்கு ஆடை அணிகளுடன் பட்டுடைகளைப் பரிசாக அளிக்கையில், இந்த சமஸ்தானத்தில் சூடு வைப்பது வழக்கமாக உள்ளதே! வேடிக்கை! போதும் உங்கள் மரியாதை" என்றார் ராமமூர்த்தி. நாராயணராவ் ஏவலர்களைத் தடுத்துப் போகுமாறு பணித்தாராம்.

அதற்கடுத்த நாள் (ஜனவரி 15,1893) ராமமூர்த்தி முகலிங்கம் கோவிலுக்குச் சென்றார். ஆலயத் திருத்தல ஆராய்ச்சிகள் ஆங்கிலேயர்களைக் காட்டிலும் ஹிந்துக்களின் வாயிலாகவே நன்றாக நடக்கின்றன என்பது ராமமூர்த்தியின் கருத்து. ஹிந்துக்கள் கோயில் கர்ப்பக் கிருகத்துக்குள் செல்லலாமல்லவா? அதனிலும் தான் பிறந்து வளர்ந்த இடமானமையால் எவ்வளவோ ஆழ்ந்த பக்தியுடன் முகலிங்கத்திலுள்ள மூன்று ஆலயங்களையும் சுற்றிவந்து அதனுள் இருபத்திரண்டு கல்வெட்டுக்களை எழுதி எடுத்துக் கொண்டு, களிங்க நாட்டு வரலாற்று ரகசியங்கள் கிடைத்து விட்டன என மகிழ்ச்சியடைந்தார்.

அந்நாளைய குடிமக்கள் எத்தகைய கள்ளமற்றவர்களெனப் பாருங்கள். ராமமூர்த்தி அந்தக் கல்வெட்டுச் சாசனங்களைக் கடகடவெனப் படித்துக் கொண்டிருக்க எல்லாரும் மூக்கின்மீது விரல் வைத்துக் கொண்டார்கள். அச்சாசனங்களைத் தெய்வங்களே எழுதியதெனவும் மனிதர்களுக்குப் பொருள் விளங்கா மொழியில் அவை உள்ளன எனவும் அங்கிருந்தோரின் நம்பிக்கை.

பர்லாகிமிடிக்குத் திரும்பி வந்து குமார ராஜாவிடம் தமது ஆராய்ச்சி எத்தனைச் சிறப்பாக நிறைவேறிற்றென்பதைச் சொன்னார் ராமமூர்த்தி. அதற்கடுத்த நாள் ராஜா அவர்களின் சமஸ்தானத்தில் ஒரு வியப்பு நிகழ்ந்தது. அந்தச் சமஸ்தானத்துக்கு ஒரு ஜோதிடர் வந்திருந்தார். தாம் முக்காலமுணர்ந்தவர் எனவும், அவர் அரசருடன் விண்ணப்பித்துக் கொண்டு, ஒரு கூட்டத்துக்கு

ஏற்பாடு செய்து தமது அறிவாற்றலைச் சோதிக்க வேண்டுமெனக் கோரினார்.

ஜாதக சக்கரத்தைப் பார்த்தால் போதும். அந்த நபர் பிறந்த தேதி, மாதம், ஆண்டு ஆகியவற்றைக் கடகடவெனச் சொல்லிவிடுவார். கூட்டத்தில் உள்ளவர்களெல்லாம் வியப்படைந்தார்கள். ராமமூர்த்திக்கு ஜோதிடத்தில் நம்பிக்கை இல்லை. இப்போதாகிலும் அவருக்கு நம்பிக்கை ஏற்பட்டிருக்குமெனச் சபையில் ஒருவர் கூறினார். உடனே ராமமூர்த்தி "இதுவரை இவர் சொன்னது வானியல் கணக்கே தவிர வேறேதுமில்லை. எனக்கு நம்பிக்கை இல்லை என்பது ஜாதகப் பலன்களிலேதான், கணக்கில் அல்ல" என்றார்.

"எனக்கு ஜாதகக் கணிதம் தேவையில்லை, கடவுள் கொடுத்த தெளிந்த அறிவுஉள்ள"தென அந்தப் பண்டிதர் அறுவையாக அறுத்தார். "ஐயா! ஆனால் நீங்கள் ஜாதக சக்கரம் பார்த்து உடனே சொல்லமாட்டீர்களே, எதற்காக! காகிதத்தில் கட்டங்கள் போட்டுக் கொண்டு கால்மணி நேரத்துக்கு மேலாக அந்த காலக்ஷேபம் எதற்கு?" என்று பதிலடி கொடுத்தார். சபையினர் முகம் வெளுத்துப் போயினர்.

ராஜா அவர்களின் தம்பியைச் சட்டப் படிப்புப் படிக்க வைப்பதற்காக மதராஸுக்கு அனுப்ப முடிவு செய்தார். ராமமூர்த்தியை மீண்டும் பாடசாலைக்கு மாற்றல் செய்தார். அன்னபூர்ணம்மாவுக்கு மற்றொரு மகன் பிறந்தான். சூர்யநாராயணா எனப் பெயரிட்டார்.

மொத்தத்தில் ராமமூர்த்தி சுதந்திரமானவர் எனும் கருத்து மட்டும் பர்லாகிமிடி ஜமீனில் எல்லாருக்கும் தெரியவந்தது. அதிகாரத்துக்குத் தலைவணங்குபவராகக் காணப் பெறவில்லையெனப் பாடசாலை அதிகாரிகள் முடிவு செய்தது தப்பவில்லை.

ராமமூர்த்திக்குச் சட்டப்பயிற்சி பெறும் வாய்ப்பு தவறிப் போனதால் தமது அக்கறை ஆராய்ச்சிகளின் மீது செல்லலாயிற்று. ஏறத்தாழ ஓராண்டு வரை விசாகை, கஞ்சாம் மாவட்டங்களில் திரிந்து சவர இனத்தார் கல்வி வளர்ச்சி பெற்றாலன்றி அவர்கள் மேம்பாடடையவியலாதென்று விண்ணப்பித்து அரசாங்கத்துக்கு ஓர் அறிக்கை அனுப்பினார். இந்த அறிக்கையைப் பற்றி வரும் அத்தியாயத்தில் விளக்குகிறேன். முகலிங்கம் திருத்தலத்தினைப் பற்றித் தாம் சேர்த்து வைத்த செய்திகளினை ஒரு பெரிய கட்டுரையாக எழுதி

வெளியிடவும் செய்தார். இவ்விரு பணிகளும் 1894 செப்டம்பர் வாக்கில் நிறைவடைந்தன.

இனி சவர மொழியைக் கற்கவேண்டும். ஹிந்துக்களின் சமுதாயத்தில் தீண்டத்தகாதவர்களாக ஹரிஜனங்கள் கருதப்பட்டமை போன்றே சவரர்களில் "பானோ" எனும் பைடி இனத்தவர்கள் இருந்தனர். "தவுடு" எனும் சிறுவனை வீட்டிற்கு அழைப்பித்து, உண்டி உடை குறைகளைத்தீர்த்து சரிசெய்து சவர மொழியைக் கற்றுக் கொள்ளத் தொடங்கினார். அவனுக்குத் தெலுங்கு ஒரியா மொழிகளும் தெரியுமாகையால் தன் மொழியை எளிதாகக் கற்பித்தான். ஆனால் அவன் மொழி தூயமுறையில்லையெனத் தெரிந்து கொள்ள ராமமூர்த்திக்கு நெடுங்காலம் தேவைப்படவில்லை. அக்காட்டுப் பகுதிகளின் வழிமுறைகள் நன்கு தெரிந்திருந்த மாமிடன்னம் குமாரசுவாமி எனும் நண்பர், பெரியவர்களிடம் சவரமொழியைக் கற்றுக் கொள்வது நல்லதென அறிவுறுத்தினார்.

எனவே சவரர்களுடன் காப்புக்கட்டிக் கொள்ளவேண்டும். அது ஒரு பெரிய நிகழ்ச்சித்தொகுப்பு.

நல்ல நாள் பார்த்து காப்புக் கட்டிக்கொள்ளக் கருதிய சவரஇனத்தவன், தேன், வாழைக்குலை, மஞ்சள், கொம்புகள், நான்கு மலைத்துடைப்பக்கட்டு, கூடை நிறையச் சோளம், இஞ்சி, புகையிலையையும் வாங்கிக் கொண்டு ராமமூர்த்தி வீட்டிற்கு வந்தான். ராமமூர்த்தி அன்புடன் விருந்தினனை எதிர் சென்றழைத்து நாற்காலியில் அமரச் செய்தார். அவன் கொடுத்த காணிக்கைகளை ஏற்றுக் கொண்டார். ஒரு சிவப்பு நிறத் தலைப்பாகை, இரண்டு கமலாப்பழம், உழக்கு அரிசி, மஞ்சள் கொம்பு, இஞ்சித்துண்டு, பானகம், இரண்டு புகையிலைச் சுருட்டு என அவனுக்கு அன்பளிப்பாகத் தந்தார்.

"கடிஞேன், கடீனம்" (என் தோழனே, என் தோழியே) என இருவரும் மும்முறை சொன்னார்கள். துடைப்பக் குச்சிகளை ஒருவர் கையிலிருந்து மற்றொருவர் வாங்கிக் கொண்டு இரண்டிரண்டு துணுக்குகளாக்கி எறிந்தார்கள். இவ்வாறு ஓர் அந்தணர் சவர இனத்தவராக மாறி அவர்களின் உறவினராகிய நிகழ்ச்சி அக்காலத்தில் ஒரு வியப்பான செய்தியே.

அவ்வாறே பர்லாகிமிடியைச் சுற்றியுள்ள ஹரிஜனப் பாடசாலைகளுக்குத் தணிக்கை செய்யச் செல்ல எவரும் விரும்பாத நாட்களில் ராமமூர்த்தி வேண்டிச் செல்லலானார்.

அந்நாட்களில் தெலுங்கு நாட்டில் பிரம்ம சமாஜம், வீரேசலிங்கம் பந்துலு என இவ்விரு பெயர்களும் மிகவும் புகழ் பெற்றிருந்தவை. அங்கு அப்பாராவ், இங்கு ராமமூர்த்தி பிரம்ம சமாஜத்தின் பெருமைகளைப் போற்றலாயினர். வாசகசாலை எனும் பெயரில் ஒரு பண்பாட்டுக் கழகம் பர்லாகிமிடியில் தோன்றிற்று. 1894 டிசம்பர் வாக்கில் பர்லாகிமிடிக்கு ஆளுநர் வருகை தந்தார். இக்கலைக் கழகத்தினர் ஆளுநருக்குப் பரிசில்களுடன் வரவேற்பளித்தனர். சவரர்களின் கல்வி வளர்ச்சிக்கு என அரசாங்கம் சவர நாட்டில் கல்விக் கூடங்கள் வைக்க வேண்டுமெனவும், அதற்கு ராமமூர்த்தி அவர்கள் உதவிபுரிவார் எனவும் கூட்டத்தினர் அரசாங்கத்தினைக் கோரினர். ஆளுநர் நன்முகமாக இருந்தாராயினும் வட்டாட்சியராயிருந்த மெக்கார்ட்னி துரைக்கு இதில் விருப்பமில்லை. ஜமீன்தார்களுக்குக் கூட இந்த வேலை அவ்வளவாகப் பிடிக்கவில்லை.

விறகு வெட்டி வாழும் மலைவாசிகளுக்குப் படிப்பெதற்கு என ஆட்சியாளர் கருதினார். ராமமூர்த்தி ஒரு பைத்தியக்காரர் எனவும், நிம்மதியாக வாழ்ந்து வரும் சவரர்களுக்கு இல்லாத ஆசைகளை உண்டாக்கிப் புரட்சியைக் கிளப்பிவிடப் பார்க்கிறாரென ஆளுநரிடம் ஆட்சியாளர் புரட்டுரை கூறினார். ராமமூர்த்தியின் முயற்சி அப்படியே நின்று போனது.

1885இல் அதுவரைக்கும் உயர்நிலைக் கல்விக் கூடமாக மட்டுமே இருந்த நிறுவனம் இரண்டாம் நிலைக் கல்லூரியாக உயர்த்தப் பெற்றது. இனி ராமமூர்த்தி பி.ஏ. தேர்வடையாவிட்டால் பத்தாம் வகுப்பு வரை மட்டுமே பாடம் நடத்த நேரிடும். இரவும் பகலும் கல்விக் கூடத்திலேயே படித்து 1896இல் பி.ஏ.யில் சென்னை மாகாணத்தில் முதல் வகுப்பில் இரண்டாமவராகச் சாதனை புரிந்தார். பர்லாகிமிடி மக்கள் இவ்வெற்றியைத் தம் ஊருக்கே பெருமைக்குரியதெனக் கருதினர். ஜமீன்தாரும் கூட ராமமூர்த்தியை அழைத்துத் தம் மகிழ்ச்சியைத் தெரிவித்தார். உடனேயே கல்லூரியில் எஃப். ஏ. மாணாக்கருக்கு வரலாற்றுப் பாடத்துக்கு விரிவுரையாளராக அமர்த்தப் பெற்றார்.

இப்பணிகள் இவ்வாறு நடந்து கொண்டிருப்பினும் ஒருபுறம் சவர மொழி ஆராய்ச்சி மட்டும் நிற்கவில்லை. தம் இல்லத்தருகிலேயே பல இடங்களிலிருந்து சவரச் சிறுவர்களை வரவழைத்தும், தாமும் மாளுவமலைகளில் திரிந்து, சவரப் பாடல்கள், கதைகள் ஆகியவற்றைத் தெலுங்கு எழுத்துக்களில்

எழுதி வைத்துக் கொண்டார். இவ்வாறு ஒரு மாதம் ஓய்வில்லாமல் திரிந்து வருகையில் மலேரியா காய்ச்சல் தாக்கியது. அந்நாட்களில் தபால் நிலையங்களில் குனைன் வில்லைகள் விற்பார்கள், நாளுக்குப் பத்து வில்லைகளென நாற்பது நாட்கள் தொடர்ந்து உட்கொண்டதால் காது கேட்பது தடைப்பட்டது. அதற்கென எத்தனையோ மருந்துகள் உட்கொள்ள நேர்ந்தது. வரவர செவிடு பெருஞ் செவிடாயிற்றன்றி குறையவில்லை. காதில் இரும்புக் குழாய் வைத்து உரத்துக் கூவவேண்டி வந்தது.

இதற்கிடையில் அப்பாராவ் அவர்கள் 'கன்யா சுல்கம்' எனும் நாடகத்தை எழுதினார். 1892இல் அது விஜயநகரம் சமஸ்தானத்தில் முதன்முறையாக அரங்கேற்றப் பெற்றது. ஆனால் ராமமூர்த்தி அதுவரை அந்நாடகத்தைப் படிக்கவில்லை. 1897இல் முதல்பதிப்பு அச்சிடல் நிறை பெற்றதும் விஜயநகரம் சென்ற பொழுது ஒரு பிரதியை வாங்கிப் படித்தார்.

அதன்பின் ஐந்தாண்டுகள் வரை ராமமூர்த்தியின் பணியனைத்தும் சவரர்கள் மீதே இருந்தது. தமது ஊதியப் பணத்தைச் செலவிட்டு பர்லாகிமிடிக்கு அருகிலுள்ள சவர கிராமங்களில் கல்விக் கூடங்களை வைத்து உரிய நிதிவுதவிக்கு முயற்சிக்கலானார். ஆனால் அரசாங்கத்திடம் எந்த அசைவும் காணப் பெறவில்லை.

இதற்கிடையில் மகன் சீதாபதி எஃப். ஏ. வுக்கு வந்தான். மதராஸுக்குச் சென்று கிறிஸ்தவக் கல்லூரியில் பி. ஏ. படிக்க வேண்டுமென்றிருந்தான். இதற்குள் கல்லூரியில் எட்மண்ட் கல்லர், டி. சி. ஆர்கில் எனும் ஆங்கிலேயரிருவர் வரலாற்றாசிரியர்களாகச் சேர்ந்தனர். அவர்களுக்கு ராமமூர்த்தியின் ஆராய்ச்சி மிகவும் பிடித்திருந்தது. புதிதாக வந்திருந்த டைலர் எனும் ஆட்சியாளருக்கு ராமமூர்த்தியின் மீது மிகவும் நாட்டமுண்டாயிற்று. ராமமூர்த்தியின் பணி பலன் பெறத் தொடங்கியது. அரசாங்கம் சவரப் பாடசாலைகள் எங்கெங்கு வைக்க வேண்டும், கல்விமுறை எவ்வாறிருக்க வேண்டும் எனக் கலந்து பேசக் கூட்டமொன்றைச் சத்ரபுரத்தில் கூட்டி ராமமூர்த்தியை வரவழைத்தார்.

இவ்வாறு இரண்டு மூன்றாண்டுகள் கடந்தன. சீதாபதி மதராஸில் பி. ஏ. முடித்தான். 1907இல் ராஜமண்டிரி சென்று ஆசிரியர் பயிற்சியையும் முடித்தான். பர்லாகிமிடிப் பாடசாலையில் வரலாற்று ஆசிரியனானான்.

1908இல் ராமமூர்த்தி சீதாபதியுடன் பர்வதப் பேட்டைக்குச் சென்றார். வம்சதாரா நதியில் தாம் விக்ரமதேவ வர்மாவுடன் விளையாடிய இடங்களைப் பார்த்தார். தாம் பிறந்த ஊரின் நதியைக் காட்டினார். நீண்டு குப்புறப் படுத்து வணங்கினார். பிறப்பும் பிறந்த மண்ணும் விண்ணுலகுக் கொப்பதன்றோ' என அதற்காகவே கூறியுள்ளனர். பர்லாகிமிடிக்குத் திரும்பி வந்தனர். சில மாதங்களில் வெல்ஷ்மன் எனும் வனத்துறை அலுவலர் சவரப் பகுதிகளைக் காண வந்திருந்தார். " இயன்ற அளவு உழைப்பூதியம் தருகிறேன். நீங்கள் என் வீட்டுக்கு வந்து சவர மொழியைக் கற்றுத் தாருங்கள் " என வேண்டினார்.

ராமமூர்த்தி சொன்னார்: " உங்கள் ஊதியம் எனக்குத் தேவையில்லை. உங்கள் வீட்டுக்கு நான் வரமாட்டேன். நண்பகல் ஓய்வு நேரத்தில் எங்கள் கல்லூரிக்கு வாருங்கள். ஒரு மணி நேரம் சவர மொழியைக் கற்பிக்கிறேன்."

வெல்ஷ்மனுக்கு இது விருப்பமில்லை. தான் அதிகாரி என்ற திமிர் இருந்தது. ஆனால் சில நாட்கள் ராமமூர்த்தியின் பாடங்களைக் கேட்டதும் அவர் எப்படிப்பட்டவரென்று உணர்ந்து பெருமைப்பட்டார். அன்பு மாணாக்கரானார். சவரர்களுடன் பேசக் கற்றுக் கொண்டார். மியான் மைக்கேல் எனும் ஆட்சியாளர் ஒருவர் வந்தார். வெல்ஷ்மன் அவருடன் ராமமூர்த்தியாரின் சவரமொழிப் பணியைப் பற்றிச் சொல்லி சென்னை அரசாங்க அச்சகத்தில் தெலுங்கு சவர மொழி அகராதி, கதைகள், பாடல்களை அச்சிடுவதற்கு உதவி செய்தார்.

இதற்கிடையில் ராமமூர்த்தியாருக்கு மற்றொருவருடன் அறிமுகம் தொடங்கியது. அவர் ஜெ. ஏ. ஏட்ஸ், பாடசாலை தணிக்கை அதிகாரி. இவரின் நட்பு நெடுங்காலம் தொடர்ந்தது. நேர்முக முறையில், ஒலிவடிவ எழுத்தில் பிள்ளைகளுக்கு ஆங்கிலம் கற்பித்தல் நல்லதென ஏட்ஸ் கூறிய அறிவுரை ராமமூர்த்தியாரையும் கவர்ந்து ஈர்த்தது. பர்லாகிமிடி பாடசாலையில் இம்முறையில் கற்பிப்பதற்கு சீதாபதி தகுந்தவரென ராமமூர்த்தி குறிப்பிட்டார்.

ஏட்ஸ், அப்பாராவ், பி. டி. ஸ்ரீநிவாசய்யங்கார் எனும் முதல்வருடன் கலந்து, ராமமூர்த்தியை ஒரு புரட்சித் தலைவனாக உருவாக்கினர். இதுவே நடைமுறை மொழிப் புரட்சியெனும் பெயரில் 1910 முதல் 1914 வரை நிகழ்ந்தது.

1911இல் முப்பதாண்டு சேவை நிறைந்ததால் ராமமூர்த்தியார் ஓய்வு பெற்றார். வயது நாற்பத் தெட்டாண்டுகள்தான். அப்போதே அவர் பெயர் சவர சமுதாயச் செம்மலென அரசாங்க அலுவர்களிடை விளங்கலானது. இதனுள் 1910 ஜூலை மாதத்தில் ஜெய்பூர் உயர்கல்விக் கூடத்திற்குத் தலைமையாசிரியராகச் சென்ற சீதாபதி, இங்கே தந்தையின் பதவி காலியாகவே திரும்பி வந்துவிட்டார். தந்தையின் இடத்தை ஏற்கலானார்.

தமது பணிப்பொறுப்புக்களில் கணப் பொழுதும் ஓய்வில்லாத சீதாபதி தந்தையிடம் இனியும் அவ்வாறு சவர மொழி கற்க இயலவில்லை. சவரப் புத்தகங்கள் அச்சாயின. பிழை பார்க்கும் பணி சீதாபதியிடம் ஒப்படைக்கப் பெற்றது. இப்புத்தகங்களை எழுதுவதற்கு அவருக்கு என்ன உதவித் தொகை தேவையென அரசாங்கம் கேட்டது "எனக்கு ஏதும் தேவையில்லை! நீங்கள் சவரச் சிறுவர்களுக்குப் பாடசாலைகள் திறந்து படிப்புள்ளவர்களாக்குங்கள். அதுவே போதும்," என ராமமூர்த்தி ஆசிரியர் பதிலெழுதினார். ஆயினும் ஆங்கில அரசாங்கம் கல்வியாளர்களை முறையாகப் பெருமைப் படுத்தியது. 1911ஆம் ஆண்டு நவம்பர் 12 ஆம் தேதி ஜார்ஜ் பேரரசர் பட்டமேற்பு விழாவின் போது கிடுகு அவர்களுக்கு 'பெருமைக்குரிய சான்று' (சர்ட்டிபிகேட் ஆஃப் மெரிட்) ஒன்றினை வழங்கியது.

1906இல் முதன் முறையாக ஏட்ஸ் உடன் அறிமுகமானது தொடங்கி கிடுகு அர்களின் அக்கறை தெலுங்கு மொழி இலக்கியங்களின் மீது செல்லத் தொடங்கியது. 1908–1910இன் இடையில் ஆசிரியர் சங்கங்களில் மொழி வளர்ச்சியைப் பற்றி உரை நிகழ்த்தியதிலிருந்து பந்துலு பண்டைய தெலுங்கு மொழி இலக்கிய வளர்ச்சியை ஆழ்ந்து படித்தறியும் முடிவு மேற்கொண்டார். அப்பாராவ் அவர்கள் வாயிலாக வேட்டூரி பிரபாகர சாஸ்திரியார் அறிமுகமானார். அவர் அப்போதே பெரும் பகழ் பெற்ற இலக்கியப் பேரறிஞர். அவர் வாயிலாக கிடுகு குரஜாடா இருவருக்கும் பண்டைய உரை நடை இலக்கியங்களில் விளக்கவுரைகளுடன் வெற்று வழக்கத்திலுள்ள மொழிநடையே பயன் பெற்றுள்ளதெனவும், சின்னயசூரி எனும் சென்னை மாகாணக் கல்லூரிப் பண்டிதரின் செல்வாக்குடன் அவ்விளக்க உரைகளனைத்தையும் காவிய மொழியில் இயற்றி வருகின்றனரெனவும் தெரிந்தது. அப்பாராவ் தமது 'கன்யா

சுல்கம்' நாடகத்தை முழுமையாக நடைமுறை மொழியில் மாற்றி 1910இல் வெளியிடவும் செய்தார்.

1913இல் வெல்ஷ்மன் செய்த முயற்சிகள் பயனளித்து, செரங்கோ எனுமிடத்தில் சவரப் பாடசாலை ஒன்றினைத் தொடங்கினர். அங்கு சவர மொழியில் பயிற்சி தருதல், ஆசிரியர்களைப் பயிற்றுவித்தல் தலையாய குறிக்கோளாம். இதற்கிடையில் வெல்ஷ்மன் இங்கிலாந்து செல்ல நேர்ந்தது. முதலாம் உலகப் போரில் அவரைச் சேரச் செய்தனர். சவரப் பாடசாலைப் பொறுப்பினை ராமமூர்த்தியும் சீதாபதியும் ஏற்று நடத்தினர்.

இதற்கிடையில் ராமமூர்த்திக்கு மொழியியலில் புதிய வழிகள் தெரிந்தன. 1912இல் மகனுடன் கலந்துரையாடி சென்னைப் பல்கலைக்கழகம் ஏற்பாடு செய்த 'டேனியல் ஜோன்ஸ்' சிறப்புரையைக் கேட்டபிறகு ஒலியியல் வடிவத்தில் தாம் முன் வந்தது மட்டுமின்றி சீதாபதியையும் தமது மாணாக்கர்களையும் கூட அக்கறை செலுத்தச் செய்தார். ஜோன்ஸ் வேண்டுதலின் மீது ஒலியியல் "தெலுங்கு வாசகம்" எனும் நூலைத் தயாரித்து இங்கிலாந்துக்கு 1913ஆம் ஆண்டில் அனுப்பவும் செய்தார். ஜனவரி முதல் தேதி ராமமூர்த்தியாருக்கு மற்றுமொரு பாராட்டும் புகழாரமும் கிட்டியது. அரசாங்கத்தினர் "ராவ் சாஹெப்" எனும் சிறப்புமிக்க விருதினை ஆசிரியருக்கு அளித்தது.

இனியும், ஆசிரியர் மிக உயர்நிலைக்கு ஏற்றம் பெற்றார். ஒருபுறம் தெலுங்கு நாட்டின் அறிஞர்களெல்லாரும் வழக்க நிலைக்கு மாறாக "இலக்கியப் போராட்டம்" நடத்தி வந்தனர். தாம் சும்மா இருக்க இயலவில்லை. அதனால் பண்டைய இலக்கிய மொழியினை அடிப்படையாக வைத்து அதனைச் செயல் முறை வடிவில் "தொடக்க நிலை இலக்கிய விரிவு" எனும் ஓரிலக்கியத்தை 1913 ஏப்ரல் 31இல் உருவாக்கி வெளியிட்டார். ஆங்கிலத்தில் "தெலுங்கு மொழி உரைநடையின் ஒரு நினைவாக்கம்" எனும் நூலினை எழுதினார்.

பந்துலுவின் புகழினைக் கேட்ட விஜயநகரத்து சமஸ்தானத்தினர் அவர்களின் பிள்ளைகளுக்கு ஆங்கிலம் கற்பிக்க வருமாறு அப்பாராவ் முகமாகச் செய்தி அனுப்பினர். விருப்பமில்லாமற்போயினும் சென்றார். ஆனால் ஓராண்டு கூட அங்கு பணி செய்யவியலாமற் போனார். 1914இல் பர்லாகிமிடி திரும்பி வந்தார்.

ஒருபுறம் வழக்குமுறை மொழிப்புரட்சி வலிமை பெற்றுக் கொண்டிருந்தது. அப்பாராவ் 'மறுப்புரை' எனும் ஆங்கில நூலினை 1914இல் வெளியிட்டு அறிஞர்கள் வாய் நிறைய மென்றுகொண்டிருந்த காலம். ராமமூர்த்தியார் 'உண்மை மரபு' எனும் மற்றொரு இலக்கியத்தை வெளியிட்டார்.

அதற்குப் பிறகு ஒரு கெட்ட செய்தி வந்தது. அப்பாராவின் உடல்நிலை சீர் கெட்டுள்ளதென்று. விசாகப்பட்டினம் மருத்துவக் கூடத்தில் சேர்ந்த அப்பாராவினைக் கவனித்துச் சிகிச்சையளிக்க வேண்டி இரண்டு மூன்று முறை சென்றிருந்தார். 'நான் இறந்து போனாலும் நீ மட்டும் நமது போராட்டத்தை நிறுத்தாதே' என்றவாறே அப்பாராவ் நண்பரைத் தழுவி வேண்டிக் கொண்டார். அப்பாராவ் 1915 நவம்பர் 30 அன்று மறைந்ததுடன் ராமமூர்த்தி தனிமையானார்.

ஆயினும் நண்பருக்களித்த வாக்கினை நிலை நிறுத்தவேண்டும். இளம் எழுத்தாளர்கள், மாணாக்கர்கள் காட்டிய ஆர்வம் உயர்நிலையிலிருந்த அறிஞர்களிடம் காணப் பெறவில்லை. அதனால் கொவ்வூரில் நடந்த அறிஞர்கள் மாநாட்டில் (1916) ராமமூர்த்தி உயிர்ப்பு மொழி விளக்கங்களைப் பற்றி விவாத உரையாற்றினார். அந்தப் பேரவையில் இருந்தவர்களும் தொலைவிலிருந்து அவர் விரிவுரையைக் கேட்க வந்திருந்தவர்களும் கந்துகூரி வீரேசலிங்கம் அவர்களிடம் தொடர்பு கொண்டு ஒருவரோடொருவர் பரிமாற்றம் புரிந்தனர்.

1917இல் பந்துலு அவர்கள் மற்றொரு சிறந்த அன்பரை இழந்து மனமுடைந்தார். வெல்ஷ்மன் உலகப் போரில் இறந்து போனார். அறிஞர்களிடையிலும் கூட மாற்றங்கள் தோன்றலாயின. தமக்கென ஒரு பத்திரிகை இருந்தாலன்றித் தமது எண்ணங்களை எடுத்துரைக்கச் செய்வதியலாதென்று ஆசிரியர் உணர்ந்தார். 1919இல் 'தெலுங்கு' எனும் பத்திரிகையைத் தொடங்கினார். தெலுங்கு மொழி இலக்கியங்களைத் தற்காலத்தவை, சாஸ்திரீயமானவை எனச் செய்வதற்கு எத்தனையோ செயல்வரைகளை அவர் தொடக்க இதழ்களில் எடுத்துக்காட்டினார். ஓராண்டு மட்டுமே அப்பத்திரிகை நடந்ததாயினும், சந்தா கொடுப்பவர்கள் சரியாக அனுப்பாமையால் தடைபடல் தப்பவில்லை. தமக்கிருந்த சிறிய வருவாயில் ஆசிரியர் அந்தப் பத்திரிகையை எவ்வாறு நடத்த இயல்வார்!

1919இல் "சாகித்திய சமிதி" எனும் ஒரு இலக்கிய நிறுவனத்தை இளைஞர்கள் சிலர் தொடங்கினார்கள். ஆசிரியரை கௌரவ அங்கத்தினராகச் சேர்த்துக் கொண்டார்கள். அவ்வாண்டில்தான் வீரேசலிங்கம் அவர்கள் இறந்து போனார்.

1920-22இன் இடையில் ஒருபக்கம் சவர மொழி மீதான பயிற்சி செய்துவரினும் அப்பணி அப்படியே நடந்துவிடவில்லை. நண்பர்கள் எழுதிய கடிதங்களைக் கொண்டு அவர் தெலுங்கு மொழி இலக்கியங்கள் மீது மிகுந்த பணி செய்திருந்ததாகத் தெரிகின்றது. எதிர்வாதங்கள், பத்திரிகைகளுடன் விவாதங்கள், எழுத்துப் பிரதிகளைச் சேகரித்தல், மூலப்பாடங்களைத் தொகுத்து வைத்தல், பண்டைக் காலத்துத் தெலுங்கு உரைநடைக் கட்டுரைக்குத் தொடர்பான சான்றுகளை ஒன்று சேர்த்தல், இவையே ஆசிரியர் சீதாபதியின் உதவியுடன் செய்து வந்த பணிகள்.

1914இல் தொடங்கிய நாடு சுற்றும் பணி அன்றாடம் அதிகமாயிற்று. 1924இல் விஜயநகரம் கல்லூரியில் விரிவுரையாற்ற பந்துலு அவர்கள் வந்தாராம். தேகுமள்ள காமேஸ்வரராவ் அப்போது அங்கு மாணாக்கர். பந்துலு அவர்கள் எப்படிக் காட்டித் தந்தாரென அவர் இவ்வாறு விளக்கினார்.

"பந்துலு அவர்கள் சாதாரண உயரமானவர். இவர் கிடுகு அல்லர், இடி எனத்தக்கவர். அவரிடமுள்ள அக்கறை எல்லாருடைய முகங்களிலும் காணலாகின்றது. சிவந்த சாயல், தலைப்பாகை, ஆடை அனைத்தும் வெண்மையாகவே அணிந்திருந்தார். அவருடைய விரிவுரையின் இடையிடையில் உரத்துக் கூச்சலிடுவார். மொழியைப் பொறுத்தவற்றில் அவருடைய உணர்வெழுச்சி கட்டுப்படாதது. அவருடைய விரிவுரையில் எனக்கு விளங்கியது இவ்வளவுதான்?

உண்மைதானே! பந்துலு அவர்கள் என்னவோ பொதுமக்களைக் காட்சியுள்ளிருத்திப் பேசுகிறார். அறிஞர்களுக்கு ஆழ்ந்த நூல்கள் தேவை. எனவே அவர்கள் இவரை 'கிராமத்து ஆசான்' என்றார்கள். இவருக்குச் சினம் தலைக்கேறிவிடும். அவ்வாறு நிகழ்ந்தன அவரது விரிவுரைகள்.

இதற்குடையில் சீதாபதியார் தந்தைக்குப் பிடிக்காத பாதையில் நடக்கத் தொடங்கினார். அவருக்கென்னவோ

கவிதைகள் புனைய ஆவல்தான். ராமமூர்த்திக்கோ உள்மூச்சு வெளிமூச்சில் கூட மொழி ஆராய்ச்சி தவிர வேறேதுமிருக்காது. அதுமட்டுமின்றி, வேறு செயலைத் தமது மகன் செய்வது அவருக்கு அடியோடு பிடிக்காது. அவர் ஒரு நாள் மகனை அழைத்து இவ்வாறு கூறினார்:

"அந்தக் கவிதைகளை எழுத நிறைய பேர்கள் உள்ளார்கள். ஆனால் லட்சம் பேர்களுக்குப் பயன்தரும் இந்த மொழிப் பணியைப் பார்த்தாயா? எல்லாராலும் செய்யவியலாது. என்னோடு ஒத்து உதவு."

மகன் எதுவரைக்குக் கேட்டாரோ, வேட்டூரி பிரபாகர சாஸ்திரியாருக்கு 7.3.24இல் எழுதிய கடிதத்திலிருந்து தெரிகின்றது.

"...சிர.சீதாபதியை என்பணியில் உதவியாக்கிக் கொள்ளவில்லை. புதினமோ, நாடகமோ, பாட்டோ, பதமோ அவன் விரும்பியதை அவன் எழுதட்டும். எழுத்துப்பணியில் ஈடுகொள்ளுமாறு இதுவரையும் சொன்னேன். ஆனால் அவனுக்கு ஒய்ச்சல் குறைவு. நகராட்சி அலுவல்கள், கூட்டுறவு வங்கி வேலைகள் செய்து, சதுரங்கம் ஆடியோ வீணை வாசித்தோ ஓய்வு பெறுகின்றான்."

அதுமட்டுமன்று. படிப்பு வராவிட்டால் சிறுவர்களை அடித்துக் கண்டித்தல் பந்துலுவின் வழக்கம். ஆனால் அது தவறு என்பது சீதாபதியின் வழி. இவ்வாறு இருவேறு பாதைகளிலுள்ள தந்தை மகன் கலவை மிஸ் மன்றோதான்.

மிஸ் மன்றோ 1928இல் மதபோதகியாகச் சவர மலைகளில் சேவைபுரிய வந்திருந்தார். அவர் மிகச் சிறந்த பெண்மணி. சவரர்கள் மீது அன்பு பாராட்டி அவர்களை நாகரிக முள்ளவர்களாக்க வேண்டுமென்பது அவர் விருப்பம். அதற்கென அவர்களின் மொழியைக் கற்க வேண்டும். இப்போது இப்படியாவது வழிக்கு வருவாரென சீதாபதிக்கு ஆறுமாதங்களில் தாம் முப்பதாண்டுகளாகக் கற்றுக் கொண்ட சவர மொழியியல் தத்துவத்தைக் கற்பித்தார். செரங்கோவில் மூடப்பட்டிருந்த பாடசாலையை மீளவும் தொடங்கினார். பந்துலு அதற்கு 'வெல்ஷ்மன் சவரமொழிப் பயிற்சிக் கூடம்' எனப் பெயரிட்டார்.

இவ்வாறு மன்றோ வருகையினால் கிடுகு அவர்கள் 'சவர ஆராய்ச்சி' யில் ஈடுகொண்டார். ஒலிவடிவ எழுத்துக்களில்,

மொழியமைப்புத் தோற்றத்தில், பண்பாட்டுத்துறையில் ஈடுபாட்டுடன், ராமமூர்த்தியார் 1931இல் "சொர மொழி விளக்க ஏடு" எனும் மிகச் சிறந்த தொகுப்பினை வெளியிட்டார். அரசாங்கம் அச்சிட்டளித்தது. மன்றோவின் செயல்திறமையில் வியப்படைந்து, பந்துலு அவர்கள் அவ்விலக்கியத்தை அவ்வம்மையாருக்கு அர்ப்பணம் செய்தார். இவ்வாறு தொடங்கிய சவர மொழிப்பணி மேலும் இரண்டாண்டுகள் தொடர்ந்தது. ஆங்கில - சொர மொழி அகராதி 1933இல் முழுமையடைந்தது.

ராமமூர்த்தியாரின் சமுதாயச் சேவைக்குக் குறிப்பிடும் வகையில் அந்நாட்களில் மிக உயர்வாக மதிக்கப் பெறத்தக்க பரிசிலாகக் கருதப் பெற்ற 'கெய்ஸர்-இ-ஹிந்த்' பொற்பதக்கம் 1-1-33இல் பந்துலு அவர்களுக்கு அரசாங்கம் வழங்கியது.

பந்துலு அவர்கள் இத்தகைய ஓய்வொழிவற்ற செயற்பாடுகளில் இருந்த பொழுது எழுபது வயது நிரம்பியவரானார். நாடெங்கிலும் சீடர்களும் அவர்களின் சீடர்களும்தான். எத்தனையோ பத்திரிகைகள் ராமமூர்த்தியாருக்கு ஆந்திரப் பல்கலைக் கழகத்தில் பேராசிரியர் பதவியைத் தோற்றுவித்தளிக்கக் கோரி எழுதத் தொடங்கின. இந்தச் சூழ்நிலையில் தெலிகிசெர்ல வெங்கடரத்னம் அவர்களின் நேர் பார்வையில் ராஜமண்டிரியில் 1933 டிசம்பர் 27,28,29 தேதிகளில் பெரும் விழாக்கோலமாக பந்துலு அவர்களின் எழுபதாமாண்டு பிறந்த நாள் கொண்டாட்டம் நடந்தது. பந்துலு அவர்கள் இயற்றிய 'பாலகவிசரணம், ஆந்திர பண்டித மணிகளின் மொழியியற் சிறப்புகள், செய்யுட் சிந்தாமணி, வியாசாவளி' என்ற படைப்புக்கள் அந்தப் பேரவையில் வெளியிடப் பெற்றன. மகாகவி ராயப்போலு சுப்பாராவ் அவர்களின் தலைமையில் சிறப்புச் சொற்பொழிவாற்றினார். பெரும்புகழ் பெற்ற எழுத்தாளர்கள் எழுதிய 'வியாச சங்கிரகம்' எனும் கட்டுரைத் தொகுப்பும் வெளிடயிடப் பெற்றது.

இவ்வெற்றி விழாவை நிறைவேற்றிக் கொண்டு பர்லாகிமிடி திரும்பிச் செல்கையில் பந்துலு அவர்களுக்குத் துயரங்கள் தொடங்கின. அப்போதைக்கு இரண்டாண்டுகளாகப் பர்லாகிமிடி ஜமீன்தார்களிடையில் தகராறு தொடங்கியது. அது குமுறிக் குமுறிக் காற்று மழையாயிற்று. 1931இல் ஒடொனல் குழு வந்தது. பர்லாகிமிடி ஒரிசாவில் சேர வேண்டுமா! ஆந்திராவில் இருக்க வேண்டுமா! என்பதே வழக்கு.

மக்களனைவரும் தெலுங்கு பேசுபவர்கள்தாம். ஜமீன்தார்களுக்கு மட்டும் ஒட்ரர்களுடன் சேர வேண்டுமென்றிருந்தது. மக்கள் ஒரு பக்கமாக இருந்தனர். ஒடொனல் குழு முன் பந்துலு அவர்கள் தாம் செய்திருந்த ஆராய்ச்சிகளின் கருத்துக்களைக் கூறி, கங்கை வமிச அரசர்கள் ஒட்ரர்களல்லலர் எனவும், அதனால் பர்லாகிமிடி, பரம்புரம் பகுதிகள் ஆந்திராவில் சேரவேண்டுமென வாதித்தார்.

நிலவுடமைக்காரர்களுக்கு இது தாங்கவியலாத செய்தியாயிற்று. உடன்பாடுகளுக்குப் பந்துலு அவர்கள் ஒப்பப் போகிறவரல்லர். அதனால் சீதாபதியை 1932 பிப்ரவரியில் வேலையிலிருந்து நீக்கினார்கள். கிடுகு அவர்களின் குடும்பம் பொருளாதார வகையில் சிக்கலில் மாட்டிக் கொண்டது. ஆயினும் தந்தையும் மகனும் அயர்பவர்களல்லர்.

இதற்கிடையில் பர்லாகிமிடியில் வட்டாட்சிக் குழு ஏற்பட்டது. நகராட்சிக் குழுவினைத் தம்வசமாக்கிக் கொண்டு அரசர் பர்லாகிமிடியை ஒரிசாவுக்குப் பங்கிட வேண்டுமென்று உறுதிபூண்டு இருந்தமையால் மக்கள் விருப்பத்துக்கு மாறாக ஒவ்வொரு மண்டலத்திலும் வட்டாட்சிக் குழு உறுப்பினர்களின் தேர்தல் நிகழ்வுகளில் மிகவும் விழிப்புடன் இருந்தனர். ராமமூர்த்தியாரும் சீதாபதியும் அரசியல் தலைவர்களாக வரநேர்ந்தது. ஒவ்வொரு தொகுதியிலும் விவசாயிகளை நிற்கச் செய்தனர்.

தேர்தலில் தெலுங்கர்களே வெற்றி பெற்றனர். சீதாபதி வட்டாட்சிக் குழுத் தலைவரானார். பர்லாகிமிடி தெலுங்கு நாட்டுக்குரியதென்ற மக்கள் கோரிக்கை வென்றது. ஒடொனல் அவர்கள் இதற்கு ஒப்புதல் அளித்தார். ஆனால் லண்டனிலுள்ள கூட்டுப் பாராளுமன்றக் குழு உடன்பட்டாலன்றி இந்த நிலை நடைமுறைக்கு வராது. அப்போது பந்துலு அவர்கள் பலரிடம் பங்குப்பணம் பெற்று மேலும் சொந்தப்பணத்தையும் போட்டு மகனை லண்டனுக்கு அனுப்பினார். பந்துலுக்குத் தம் மகன்மீது எத்தனை அன்பிருப்பினும் இவ்வாறு அறிவித்தார்:

"ஆந்திரர்களிடையிலாயினும், உன்னை நம்பித் தமக்குப் பிரதிநிதியாக லண்டன் அனுப்புகின்றவர்களிடையிலாயினும் நீ துரோகி ஆகமாட்டாய் எனும் நம்பிக்கை எனக்கில்லாமலில்லை. ஆயினும் சொல்கிறேன், நீ பிறர் மாயப்பேச்சுகளில் ஏமாறக்கூடாது. விழிப்புடன் இரு."

சீதாபதி செயலை நிறைவேற்றிக் கொண்டு வந்தார். ஆனால் அரசரவர்கள் மீண்டும் லண்டன் சென்று சொல்லவறியாத செல்வத்தைச் செலவழித்து பர்லாகிமிடி, அதனைச் சுற்றியுள்ள கிராமங்களை ஒரிசாவில் சேர்ப்பிக்குமாறு ஒப்புதலைப் பெற்றுவிட்டார். எவ்வாறோ ஏறத்தாழ நானூறு கிராமங்கள் மட்டும் தெலுங்கு நாட்டிற்கு உரியன ஆயிற்று. அது ஒரு பகுதி வெற்றியேயாயினும் தந்தை மகனைக் குலையச் செய்தது.

‘சீதாபதி உங்களால்தான் கெட்டுப் போனான்’ என அன்னபூர்ணம்மா பழி சுமத்தத் தொடங்கினார். சீதாபதி தமது குடும்பத்துடன் சென்னை போய்ச் சேர்ந்தார். சிறிய பிள்ளைக்கு ராஜமண்டிரியில் வேலை கிடைத்தது. இவ்வாறு ஒவ்வொருவரும் தம் வழியைப் பார்த்துக் கொள்ளவும் பந்துலு அவர்களும் அன்னபூர்ணம்மாவும்தான் மிகுந்தார்கள்.

1934இல் பந்துலு அவர்களை ‘பாரதீ தீர்த்த சபை’யினர் அழைப்பித்தனர். ‘ மகாமகோபாத்யாயா’ விருதினை வழங்கிப் பாராட்டினர். ஒரு சவர ஆங்கில அகராதி அச்சாகிக் கொண்டிருந்தது. பிழைகள் பார்த்தனுப்ப வேண்டும். மற்றொருபுறம் சூர்யராய ஆங்கில அகராதி விளக்கவுரையாக்கம் நடந்தது. இன்னொரு புறம் சப்தரத்னாகரம் சொல்லகராதியை இரண்டாகப் பிரிக்கும் கொண்டாட்டம்.

இந்நிலையில் 1935 மே 6ஆம் தேதி பந்துலு அவர்களுக்கு அரசாங்கம் வெள்ளிவிழாப் பொற்பதக்கத்தை வழங்கியது. வந்ததைப் பெற்றுக் கொள்வதேயன்றி இது வரவேண்டுமெனக் கோருவது பந்துலுக்குத் தெரியாது.

ஆனால் ஜமீன்தார்களுக்குப்பந்துலுவின் மீது பகை வளர்ந்துவிட்டது. ஏறக்குறைய ஊரெல்லாம் ஒதுக்கும் படியான வேலையைச் செய்தார்கள். வீட்டுவேலை செய்பவனாகட்டும், ஓடு விற்பவனாகட்டும், நாவிதனாகட்டும் பந்துலு வீட்டுக்கு வேலை செய்யக் கூடாதெனக் கட்டுப்பாடாக்கினர். ஊரில் பெரிய மனிதர்கள் யாவரும் பந்துலுவுடன் பேசுவதைக் கூட நிறுத்திவிட்டனர். ஒரு தடவை அவ்வூருக்கே பெரும் புகழ் சம்பாதித்து வைத்த பந்துலு அவர்களுக்குப் பர்லாகிமிடி இப்படிப் பரிசளித்தது.

இவ்வாறு ஐந்தாறு மாதங்கள் கழிந்தன. பணி ஓய்வு பெற்ற பின் பந்துலு செய்த அரும்பணி தமக்கென ஒரு சொந்த வீடு கட்டுக் கொண்டது. மேலும் தம் படிப்புக்காக இரண்டு

அறைகள் அமைத்திருந்தார். அவ்வறைகளில் இலக்கியங்களே தமது எல்லாமும் என ராமமூர்த்தி வாழலானார்.

அந்நாள் நவம்பர் 23, சனிக்கிழமை. ஸ்ரீபாத சுப்ரமண்ய சாஸ்திரியார் பர்லாகிமிடிக்குச் சென்று முப்பத்தாறு மணி நேரம் பந்துலுவுடன் தங்கினார். சாஸ்திரியார் சோர்வடைந்து போனாலும் பந்துலு புத்திளைஞரைப் போலப் பேசிக் கொண்டேயிருந்தார். அவர் தாம் படும் பாடுகளைப் பற்றி இவ்வாறு உரைத்தாராம்:

"1936 ஏப்ரலில் ஒட்ரராஷ்டிரம் (ஒரிசா) ஏற்படப் போகிறதென்றார்கள். சில நாழிகைகளில் ஒட்ர ராஷ்டிர வாடை வீசிக்கொண்டிருக்க நான் பர்லாகிமிடியை விட்டு மதராஸ் மாகாணத்துக்குள் வந்து விடுகிறேன். ஆனால் பர்லாகிமிடி ரயில் நிலையத்தில் ரயில் ஏறமாட்டேன். பழைய பட்டினம் சென்று ஆற்றில் தலை முழுகிவிட்டு, பர்லாகிமிடி மீண்டும் மதராஸ் மாகாணத்தில் சேர்ந்தாலன்றி, அவ்வூரில் அடிவைக்கமாட்டேன் எனக் காப்புக் கட்டிக் கொண்டு ரயிலேறுகிறேன். ஆனால் ரயிலேறி எந்த ஊருக்குப் போவது? இந்த வயதான காலத்தில் எனக்கு எங்கே சுகம் இருக்கிறது?" சாஸ்திரியாரின் இதயம் கரைந்து போனது.

பந்துலுக்கு வரலாற்று உண்மைகள் மீது எத்தனை கட்டுண்ட பற்று! எத்தகைய மொழிப் பற்றுதல்! தமது கோட்பாட்டுக்கெனத் தாம் சம்பாதித்த செல்வமனைத்தையும் விட்டு உண்மையுடன் அத்தகைய பணிபுரிந்து ராஜமண்டிரியில் தமது மகனிடம் கிடுகு அவர்கள் தம் மனைவியுடன் போய்ச் சேர்ந்தார்.

ராஜமண்டிரி வாசம் பந்துலுக்குச் சற்று இதயச் சுமையைக் குறைத்தது. நம் கண்களுக்கு அவர் ஆங்கிலம் தெலுங்கு கற்பித்தது அன்றாடச் செய்கை. எத்தனையோ பேர் கவிஞர்கள், எழுத்தாளர்கள், விமர்சகர்கள் பந்துலு அவர்களை நாள் தோறும் வந்து பார்ப்பார்கள். 1938இல் ஆந்திரப் பல்கலைக்கழகம் பந்துலுக்கு 'கலா பரிபூர்ணர்' பட்டத்தை வழங்கியது.

1934இல் பெரிய மகனுடன் வந்த இடர்பாடு அப்படியே தொடர்ந்தது. அவருக்கு மகன் கடிதம் எழுதுவதில்லை. மகனுக்கும் அவர் எழுதுவதில்லை. 1938இல் பந்துலுவின் 'சூர்யராய ஆந்திர சொல்லகராதி விளக்கம்' கூட வெளியிடப் பெற்றது.

மகனுடைய இல்லம் சிறியது. தாம் நிறையப் புத்தகங்களையும் தமது டைரிகளையும் ஆயிரக் கணக்கான கடிதங்களையும் கையெழுத்துப் பிரதிகளையும் அங்கேயே விட்டுவிட்டு வந்தாலும் வீடு பற்றாமலிருந்தது. கடைசி நாட்களில் பந்துலு அவர்கள் அவ்வளவு சுகமாக வாழவில்லையென்றே சொல்லலாம்.

இதற்குத் துணையாகப் பந்துலு அவர்களுக்குச் சிறுநீர் கோசம் தொடர்பான நோய் பீடிக்கலானது. வயதோ அதிகமாகி வருகிறது. அல்லாமலும் தாம் தொடங்கிவைத்த போராட்டம் வெற்றி பெற்றுவிட்டது. இனி இலக்கியங்களைக் குறித்துப் பேசும் அறிஞர்கள் இரார் என்ற பெருமித உணர்வு ஏற்பட்டுள்ள ஒரு மகிழ்ச்சிதான் மிச்சமாயிற்று. 'செயல்முறை இலக்கிய ஆந்திரச் சிறப்புமை' எனும் 'கிருத்திக கிராந்திகாந்திர விஜ்ரும்பணம்' எனும் கிரந்தத்தை நிறைவாக்க வேண்டும். இவைதாம் மிச்சமிருந்த ஆசைகள்.

இவை செய்து முடிக்க வேண்டியிருக்கின்றன. ஆனால் ஆர்வம் குறைந்து விட்டது. நினைவுத் திறன் மெலிந்து வருகிறது. என்ன தின்றாலும் செரிக்காமல் விக்கல் வடிவத்தில் எல்லாம் வாந்தியாக வரத் தொடங்கியது. ராஜமண்டிரியில் டாக்டர்கள் மதராஸுக்குச் சென்று பெரிய மருத்துவமனையில் சிகிச்சை பெறவேண்டுமென்றார்கள். அன்னபூர்ணாவும் பையனுக்கு எழுதலாம் என்றாள். பந்துலு அவர்கள் முறைப்புடன் பார்த்தார்.

பந்துலு அவர்களின் அம்மான் மகன் காள்ளகூரி சூர்யநாராயணா அவர்கள் பச்சையப்பன் கல்லூரியில் வேதியல் பேராசிரியராக இருந்தார். அவருக்குத் தாம் வருவதாகப் பந்துலு அவர்கள் கடிதம் எழுதினார். அன்னபூர்ணம்மா துணையாகப் புறப்பட்டார். இந்தச் செய்தியறிந்த சீதாபதிக்கு முதல் தடவையாகப் 'பரிவுணர்ச்சி ' என்றால் என்னவெனத் தெரிந்தது. சூர்யநாராயணா அவர்களுடன்கூடத் தாமும் ரயில் நிலையத்துக்கு வந்தார்.

ஜனவரி 4, 1940. தந்தையும் மகனும் மீண்டும் ஒரு கூண்டில் சேர்ந்தனர். தாய்க்கு மிக்க மகிழ்ச்சி. பந்துலுக்கும் மன நிறைவுதான். ஆனால் வெளிக் காட்டும் மனிதரல்லர். தமது உடல்நலம் எப்படியும் நன்றாகாதெனப் பந்துலுக்குத் தெரிந்து போயிற்று. ஆயினும் உடலைக் காப்பாற்ற வேண்டுமே! கெ.நாராயணமூர்த்தியெனும் பெயருடைய டாக்டர் மருத்துவம் புரிந்தார். ஒரு நாள் அப்படியும் மறுநாள் இப்படியுமாக

உடல்நிலை மாறியது. செரிமானம் மட்டும் ஒரு மாதிரியாகக் குதிர்ந்தது.

பந்துலு ஒருநாள் மகனை அருகில் அழைத்து "எங்காவது ஒரு கூட்டம் ஏற்பாடு செய்கிறாயா? உரை நிகழ்த்துவதற்கு," என்றார். உடல்நிலையைப் பார்த்தால் மிகவும் நலிந்திருந்தது. ஆனால் ஆர்வம், பற்றுதல் மட்டும் சிறிதளவும் குறையவில்லை. அதனால் சொற்பொழிவு செய்வதனால் தோன்றும் துயரத்தை விடச் செய்யாமலிருப்பதால் உண்டாகும் துக்கம் அப்பாவை அதிகம் பாதிக்கும் என அறிந்த சீதாபதியார் சென்னபுரி ஆந்திர மகாசபையினரிடமும் கூடவல்லி ராமபிரம்மம் அவர்களிடமும் பேசலானார்.

பெரிய சபையில் சொற்பொழிவாற்றினால் அயர்வு அதிகமாகுமெனத் தமது 'பிரஜாமித்ரா' அலுவலகத்தில் 1940 ஜனவரி 15ஆம் நாளில் கூட்டத்துக்கு ஏற்பாடு செய்தார்கள். நாம் இனி இவ்வுலகை விட்டுச் செல்ல வேண்டிய சமயம் வந்து கொண்டருப்பதால் தமது இறுதியான உரைச் செய்தியைத் தெலுங்கு பத்திரிகைகளின் ஆசிரியர்கள் எழுத்தாளர்கள் கேட்க வேண்டுமென 'இறுதி விண்ணப்பம்' செய்தார்.

".....பல்கலைக் கழகத்திலுள்ளவரும் அரசாங்கக் கல்வித்துறையினரும் இன்னும் அருள் பாலிக்கவில்லை. இருபத்தைந்தாண்டுகளாக இவ்விரண்டு நிறுவனத்தினரும் வழக்கு மொழியை உணர்ந்து கொள்ள வேண்டுமென்று எதிர்பார்த்த பொழுது, என் வாதம் தெலுங்கு மொழியினர் உணராமற் போனமை கவலை மிகுதியாகிவிட்டது. அதனால் அந்நிறுவனத்தினர் இதனை உணர்ந்து கொள்ள இயலவில்லை. இப்பொழுது தெலுங்கர்கள் என் வாதத்தை உற்றுணர்வார்களாயின், அந்தத் துறையினரும் உணர்ந்து ஒப்புக் கொள்ளலும், நடைமுறையில் செயலாக்குவதுமான பணிச் சுமையும் உங்களுடையது. இந்தப் பணியை உங்களிடம் ஒப்படைத்து நான் விடை பெற்றுக் கொள்கிறேன். நன்றி."

உண்மையில் இதுவே அவரின் இறுதி விண்ணப்பமுமானது. 17ஆம் தேதி பந்துலு அவர்கள் தம் தந்தையின் திதியை நடத்தினார். சீதாபதியையும் உடல் முழுகித் தம்முடன் இருக்க விரும்பினார். "அறுபத்தாறாம் தடவையாக என் தந்தையின் நினைவு நாளைப் படைக்கிறேன். இதுவே கடைசியாக இருக்கும் போலும்," என்றார். அதாவது இனி

இக்கடைமையை 'உனக்கு ஒப்படைக்கிறேன்' என மகனுக்கு உணர்த்தனாரெனலாம். சீதாபதிக்குக் கண்களில் நீர் கசிந்தது.

அதன்பின்னர் இரண்டு மூன்று நாட்களுக்கு ராமமூர்த்தியாரின் உடல்நலம் முழுமையாகக் குறைந்தது. திதிநாளன்று உபவாச உணவினாலேயே நோய் மீண்டும் அதிகமாயிற்றென்று டாக்டர் கூறினார். உண்டதும் பருகியதும் உள்ளே செரிக்காமலும் மூச்சுத் தடுமாறியும் வேதனைப்பட்டு 21ஆம் தேதி இரவெல்லாம் காலதேவனுடன் போராடி 22ஆம் தேதி காலை 7.20மணிக்குப் பந்துலு அவர்கள் பௌதிக உடலை விட்டகன்றார்.

ராமபிரம்மம் அவர்கள் சீதாபதியைத் தேற்றுவித்து நடக்க வேண்டிய கர்மகாண்டங்களை அருகிலிருந்து நடத்தினார். அடையாறு மயானத் திடலில் சென்னையிலிருந்த பிரமுகர்கள் யாவரும் இறுதித் தீயிட்டு வணக்கம் புரிந்தனர்.

செய்தித்தாள்களனைத்தும் அவர் மரணத்துக்குப் பிரமுகர்கள் வெளியிட்ட இரங்கற் செய்திகளை வெளியிட்டன. நவசாகித்திய பரிஷத் அந்த ஆண்டிலேயே 'பிரதிபா'வை (நான்காம் பதிப்பு) கிடுகு அவர்களின் பெயரில் சிறந்த கட்டுரைகளுடன் வெளியிட்டது.

அன்னபூர்ணம்மா 1942இல் இறந்தார்கள். சீதாபதி மட்டும் 1969 வரைத் தமது தந்தையாரின் வழியிலேயே மொழி இலக்கிய ஆராய்ச்சியாளராக வரலாறு படைத்தார். பல இலக்கியங்களை இயற்றினார்.

சீதாபதியாரின் மகனுக்கு மீண்டும் ராமமூர்த்தி என்று பெயரிட்டார். அவர் ஹைதராபாதில் உள்ளார். அவரும் தமது தந்தை தாத்தாவின் வழியிலேயே 'சவரர்கள்' மீது ஒரு நூலினைத் தெலுங்கில் வெளியிட்டார். தாத்தா அவர்களின் வாழ்க்கையை ஒரு சிறிய புத்தகமாக 1976இல் அச்சிட்டார்.

கிடுகு அவர்களது அறிஞர்கள் வம்சம். ராமமூர்த்தி அறிஞர் மட்டுமின்றி ஆராய்ச்சியாளருமானார். வருங் காலத்தினருக்கு ஆர்வமூட்டினார். அவரது கதை கடலின் அலை போலப் பாவிப் பரந்தது. பல கோணங்களில் விரிவடைந்தது.

# அத்தியாயம் 2

## பன்முகப் புலமை

ராமமூர்த்தியாரின் அறிவாற்றல் எந்த ஒரு இலக்கியப் பிரிவுக்கும் சேர்ந்ததன்று. மானிடவியல் நூல்கள் எனப்பெறும் அனைத்துப் பிரிவிலும் அவர் தலையிட்டுத் தமது அறிவாற்றலைப் பெற்றார். அவருக்கு வந்த செவிடும்கூட அவரின் அரும் செயலை வளர்த்தது. ஆற்றல் மேலும் வளரலாயிற்று. அவர் தம் வாழ்க்கையில் ஒவ்வொரு கணத்தையும் கல்வித் தொடர்பான பணிகளுடனேயே கடத்தினார். ஒரு சிறு பொழுதும் வீணாக்கி அறியார். அதனால் அவர் ஒரு புத்தகப் புழு அல்லர். அத்தகைய இயல்புடையவர். உலக மரியாதைகள் நன்கறிந்தவர். இல்லையெனினும், தமது அறிவாற்றலை வாழ்க்கைக்கும், சுற்றியுள்ள சமுதாயத்துக்கும் ஏற்புடையதான முறையில் விரிவாக்கம் செய்து கொண்டு சென்றார். 1906 வரையிலும் தெலுங்கு இலக்கியத் துறையில் நுழையாத அவர் 1913ஆம் ஆண்டு வருவதற்குள் சிறந்த பேராசிரியர்களின் மொழிநடையிலும் இலக்கணப் பிழைகளுள்ளனவென எடுத்துக் காட்டுமளவுக்கு உயர்ந்தார். இதற்குக் காரணம் அவரின் நிலையான கல்வி ஆர்வம். மகாபாஷ்யம் முதலாகத் தொடங்கி, காமநூல் வரைத் தமது உள்ளக் குகையில் கட்டுண்டிருக்கச் செய்தாரவர். எப்போது ஏது வேண்டுமாயினும் தெளிவுடன் புரிந்துணர்ந்து கொள்வார். என்ன பேசினாலும் என்ன எழுதினாலும் நடுநிலைமை, துடுக்கின்மை என எடுத்துக்காட்டி மிளரச் செய்யும்.

### வரலாற்று ஆராய்ச்சி:

உயர்நிலைப் பாடசாலை வகுப்புக்களுக்கு வரலாற்றுப் பாடங்களைச் சொன்னாலும் வகுப்புக்கு மட்டுமேயன்றித் தமது

அறிவியல் விளக்கத்துக்கெனவும் அவர் அக்காலத்தில் வந்திருந்த வரலாற்று நூல்களனைத்தையும் தெளிவுறப்படிப்பவர். ஆங்கிலேய, ரோமானிய, சுவிஸ், பிரஞ்சு, அமெரிக்க வரலாறுகளை எளிதில் படித்தறிந்தார். அவ்வறிவுடன் வரலாற்றை அழகுபெற நடத்தியுணர்த்துவார். பந்துலு அவர்களுக்கு வரலாறு என்றால் தனிநபர் கதைகளன்று, ஒரு சமுதாய நாகரிகத்தில் உள்ள பரிணாம வளர்ச்சியானது தனிநபர்கள் மீதும், சமுதாயத்தின் மீதும் எத்தகைய வளர்ச்சி மாற்றங்களைத் தோற்றுவித்ததைக் காண்பதாகும். அறிவியல் போதனையை விட மிகுந்த அக்கறையுடன் வரலாற்றினைப் பாடமாக நடத்துவாராம்.

இவ்வரலாற்று ஆர்வ உணர்வுடனேயே அவர் முகலிங்கம் சுற்றுச் சூழ்நிலைகளின் பழைமையைப் பற்றி, அச்சிட்டால் முப்பத்தைந்து பக்கங்கள் பிடிக்கும் கட்டுரையைச் சார்ந்த சான்றுகளுடனும் உறுதி செய்யுங் குறிப்புகளுடன் வம்சாவளித் தொகுப்புக்களுடன் எழுதினார். இந்தக் கட்டுரையில் அவர் பத்து அம்சங்களை விளக்கவுரை செய்தார்:

1. முகலிங்கேஸ்வர ஆலயம், 2. பீமேஸ்வர ஆலயம், 3. சோமேஸ்வர ஆலயம், 4. தொன்மையான ஆலயச் சிதைவுகள், 5. பத்மநாபர் மலை, 6. பண்டைய நாணயங்கள், 7. பாழடைந்த பண்டைய கோட்டைகள், 8. களிங்கச் சிலைகள், 9. தெலுங்கு 'பெண்டா'வின் கல்வெட்டுச் சாசனங்கள், 10. செப்பேடுகள்.

இக்கட்டுரையின் கருத்துக் கோவையை இவ்வாறு கூறலாம். முகலிங்க சாசனங்களில் குறிப்பிடப்பெற்ற களிங்க நகரம் 'முகலிங்கமே' யன்றிக் களிங்கப் பட்டினமன்று. பர்லாகிமிடி அரசர்கள் அனந்தவர்மச் சோழன் கங்கதேவன் வம்சத்தினரே. முகலிங்க ஆலய மகாத்மியத்தில் சவரர்களின் பெருமையும் கூறப் பெற்றமையால் களிங்க நாட்டில் மிகத் தொன்மையான காலத்திலேயே சவரர்கள் ஆட்சி செய்திருக்க வேண்டும்.

ராமமூர்த்தி கட்டுரை வெளியிடுகையில் அரசாங்கத்தினர் இந்த இருபத்திரண்டு சாசனங்களின் நகல்களை வாங்கித் தமது 1896 ஆண்டறிக்கைகளில் வெளியிட்டனர்.

இன்னும் ராமமூர்த்தியார் 'நடிகாம்' செப்பேட்டினையும் சேர்த்துவைத்தார். சாசனத்திலுள்ள சுலோகங்களைக் கொண்டு கி.பி.1038 மே 31ஆம் தேதி இரவு 8.20 மணிக்கு வஜ்ரஹஸ்தர்

பட்டாபிஷேகம் ஏற்றார் எனத் திண்ணமாக்கினார். இந்தச் சாசனத்தைச் சான்றாக அந்த நாட்களில் முகலிங்கத்தைக் களிங்க நகரம்தான் என்பார்கள் எனவும் எடுத்துக் காட்டினார். ஸ்டென்கொனோ (எபிகிராஃபியா இண்டிகா 9.95), வின்செண்ட் ஸ்மித் (ஏர்லி ஹிஸ்டரி ஆஃப் இண்டிகா, 14-332), ஆகியவற்றில் தமது கருத்துரைகளை ராமமூர்த்தியின் எடுத்துக்காட்டுகளுக்கு ஒப்புதலளிக்கும் வகையில் பதிவு செய்வித்தார்.

1895-96இல் மேலும் இரண்டு சாசனங்களைத் தெரிந்தெடுத்தார். தீர்க்காசி, கொங்குதிரு சாசனங்கள். கொங்குதிரு சாசனத்தை அல்லய தொட்டாரெட்டி அமைத்தார். அதனில் 'அர்தோய புண்யகாலம்' எனும் சொற்றொடர் உள்ளது. அந்த அர்தோய புண்ய காலமென்றால் என்னவெனத் தெரியாமல் பந்துலு அவர்கள் கீத்ஹாரன் துரைக்கு எழுதினார். அவர் பதில் எழுதினார். தமது கட்டுரையில் துரையின் பெயரை நினைத்து, 'அமாவாசை, ஞாயிற்றுக்கிழமை, வியதிபாதம், சிரவணம் கலந்த புஷ்ய மாக மாதங்களில் (தை, மாசியில்) வரும் யோகத்தை அர்தோதயம் என்றனர். இதனைக் கொண்டு இந்த தானம் நிகழந்தது 1432 ஜனவரி 14ஆம் தேதியென ராமமூர்த்தி உறுதி செய்தார்.

1911ஆம் ஆண்டுக்குப் பிறகு ராமமூர்த்தியார் முற்றிலும் மொழி உரையாடல்களில் மூழ்கிக் கிடந்தமையால் சாசனம், வரலாற்றின் மீது மிகுதியாக நேரம் ஒதுக்கவியலாமற் போனார். கீழை கங்கர்களின் ஆறு செப்புப் பட்டயங்களைக் கண்டெடுத்தாராயினும், அதனை ஆய்வு செய்யத் தமது மாணாக்கர் சிலுகூரி நாராயணராவிடம் அளித்தார். அதன் பின்னர் ராள்ளபண்டி சுப்பாராவ் அவற்றை எடுத்தாராய்ந்து கட்டுரைக் கோவையில் (1933) வெளியிட்டார். இவரோடன்றி மண்ட நரசிம்மராவ், பாவராஜு கிருஷ்ணாராவ் முதலான மாணாக்கர்கள் பலர் கல்வெட்டுழுத்துக்கள் ஆய்வு பாட ஆராய்ச்சிக் கலையைக் கற்றுக் கொண்டனர்.

வழக்கு மொழிப் போராட்டம் நிழ்ந்து கொண்டிருந்த நாட்களிலும் கூட கிடுகுவும் குரஜாடாவும் செப்பேடுச் சாசனங்களை ஆதாரமாய் பயனாக்கிக் கொண்டனர். சாசன வடிவங்களை எவரும் மாற்றவியலாது. எனவே அவை அந்நாட்களின் எடுத்துக் காட்டுச் சான்றுகளின் உருவங்களாம். அதனாலேயே அச்சிடப் பெற்ற நன்னயாவின் தெலுங்கு

பாரதத்துக்கும் எழுத்துப் பிரதிகளிலுள்ளதற்கும் இடையிலுள்ள வேறுபாடுகளை ராமமூர்த்தியார் ஒப்பிட்டுக் காட்டினார். 1919இல் தஞ்சாவூர் சென்றிருந்த பொழுது அங்கிருந்த பாரத நூலின் பிரதிகளுடன் இணைத்துப் பார்த்த பின் ராமமூர்த்திக்கு ஒரு உண்மை தெரிந்தது.

அச்சான பிரதிகளில் ஆசீரர்த்தக ரூபம் (உட்பொருளுருவகம்)-இடமாகக் காணப் பெறுகிறது. (காத்திருந்தவன்), ஆனால் எழுத்துப் பிரதிகளில்-இடம் எனக் காணக்கிடக்கின்றது. (காத்திருந்தனன்). இதற்கென ராமமூர்த்தியார் சாசனத்தைத் தேடிப் பார்க்க முயலலானார். ஹைதராபாத் தொல்பொருளியல் துறையினர் செப்பேட்டு ஆவணத் தொகுப்புக்களில் உப்பரபள்ளி சாசனத்தில் (காகதி கணபதி தேவரின் ஆட்சிக் காலத்தது)-இடம் உடன்கூடிய வடிவம் கிடைத்தது. ஆதாவது அச்சிட்ட வடிவம் பிழையானதென்று. உடனே தமது கருத்துக்களை லண்டனிலிருந்த பார்னெட் துரைக்கு, பில் கிராம் அவர்கள் வாயிலாகத் தெரியச் செய்தார். பார்னெட் துரை பேராசிரியர். ராமமூர்த்தியின் விளக்கக் குறிப்பினை ஒப்புக்கொண்டு இடமான வடிவத்தைப் பிழை தவிர்ப்புப் பட்டியலில் சேர்ப்பித்தார். இச்செய்தியை 7.3.24இல் ராமமூர்த்தியார் வேட்டூரி பிரபாகர சாஸ்திரிக்கு எழுதின கடிதத்தில் எடுத்தியம்பினார்.

## சவரர்களின் கல்வி வளர்ச்சி–சில யோசனைகள்:

ராமமூர்த்தியாரின் ஆராய்ச்சிகளனைத்திலும் தம்மைச் சார்ந்த மனிதர்களைக் குறித்த ஒரு ஆழ்ந்த வேதனையே தலையாய குறிக்கோள். அதற்கெனவே வாழ்க்கை முடிய ஒரே கலையையோ, ஒரே மரபினையோ ஏற்றுக் கொண்டிருந்தாரில்லை. சுற்றிலுமிருந்த சமுதாயத் தேவைகளோடு தமது படிப்பாற்றல் பரிதியினை வளர்த்துக் கொண்டார். அதனால் அவரைத் தற்கால அறிவாளர் எனவும் 'கிராமத்து ஆசான்' எனவும் செய்த அவமானம் அவர்களின் அறியாமையேயன்றி மற்றேதுமன்று என 1937இல் செல்லப் பிள்ளை வெங்கடசாஸ்திரி குறிப்பிட்டு 'தேஷாம் நிந்தா நகர்த்தவ்ய: யுகரூபா ஹிதேத்விஜா:' (பழியேற்பன்று பணியீர்ப்பு, காலத்தோற்றத்துக் கொப்ப இரண்டாந்தரத்தார்).

அந்நாட்களில் மாளுவ மலைப்பகுதிகளிலிருந்த சவரர்கள் காடுவாழ் மக்கள். கொடியரெனக் கருதப்பெறுபவர்கள். நரபலி கொடுப்பவரெனவும், கள் குடிப்போரெனவும் பிற சமூகத்தினர் அவர்களுக்குத் தொலைவாக இருந்தனர். அந்நாளில் சவரர்கள் மட்டுமின்றி பஞ்சாராக்கள், கோண்டுகள், கொண்டதுரைகள், யானாதிகள் போன்றோரும் அவ்வாறே தொலைவில் இருப்பவர்கள். அவர்களின் சூழ்நிலைகளில் இப்படியாக இருபதாண்டுகளாகச் சிறிது முன்னேற்றம் காணப் பெற்றது. ஆனால் கல்வியளவிலும் நாகரிகப் பண்பாடுகளிலும் அவர்கள் பத்தொன்பதாம் நூற்றாண்டிலேயே இருந்தார்கள். அதற்காகவே ராமமூர்த்தி சவரரின் கல்விக்கென, 'சவரர்களிடையில் கல்வியறிவின் நிலைமைகள் பற்றிய ஒரு நினைவூட்டு வேண்டுகோள்' எனும் கட்டுரையை 1894 செப்டம்பரில் அரசாங்கத்துக்கு அனுப்பினார். அதில் கண்ட விவரங்கள் இங்கு நினைவில் கொள்வது மிகவும் தேவை. இத்தனையும் பல்கலைக் கூடங்களில் ஆராய்ச்சி செய்திருந்தாலும் மலைவாழ் மக்களின் கல்வி வளர்ச்சிக்குச் சாதனையில் நாம் பயனற்றவராவோம். சவரர்களின் நிலைமைகள் மேம்பாட்டுக்கு அவர் அளித்த யோசனைகள் இவை:

1. சவரமொழிப் பயிற்சிக்கென ஒரு கையேடு வெளியிடவேண்டும்.

2. மலைவாழ் மக்கள் பாடசாலைகளில் பணிபுரியும் ஆசிரியர்கள், அந்தப் பகுதிகளில் பணிபுரியும் ஆசிரியர்கள், அந்தப் பகுதிகளில் பணிபுரியும் அலுவலர்கள் சவரமொழி கற்க வேண்டியது மிகவும் தேவை என ஊக்குவிக்க வேண்டும்.

3. சவரர்களுக்கெனத் தனித்த மாலைப் பொழுது வகுப்புக்களைத் திறந்து அரசாங்கக் கல்விக் கூடங்களுடன் இவற்றை இணைப்புறச் செய்ய வேண்டும்.

4. சவரமொழியில் வாய்மொழியாகவே போதனை செய்யவேண்டும். பொம்மைகள் மற்றும் படங்களின் உதவியுடன் கற்பிக்க வேண்டும். வாய்க் கணக்குகள் வாயிலாகக் கணிதம் கற்பிக்க வேண்டும். அதன் பின்னரே முறையாகப் படிக்கவும் எழுதவும் கற்பிக்கலாம்.

5. தேர்வுகளில் வெற்றி பெறும் மாணாக்கர்களுக்கு அளிக்கப் பெரும் பரிசில்களுக்கான நிதி ஒதுக்கீடு சிறிது வெள்ளி

அணிகலன்களாகவும் இருத்தல் தேவை. சவரர்கள் அத்தகைய அணிகளைப் பெருமைக் குரியனவாகக் கருதுகிறார்கள்.

6. அரசாங்க அலுவலகங்களுக்குச் சவர இளையோர்கள் சென்றால் அவர்கள் குற்றம் புரியாதவர்களாயின் அமர்வதற்கு அனுமதிக்க வேண்டும்.

7. கிராமத் தலைவர்களான கொமாங், புயாக்கள் சவர சமுதாயத்தில் செல்வாக்குள்ளவர்கள். அதனால் அவர்களையே பாடசாலைப் பொறுப்பாளர்களாக நியமிக்க வேண்டும்.

8. சவரர்கள் மலையினத்தாரில் சிலரைத் தேர்ந்தெடுத்து அவர்களுக்கு ஆசிரியர் பயிற்சி அளிக்க வேண்டும்.

9. அரசாங்க அலுவலகங்களைச் சார்ந்துள்ள சவரமொழி பெயர்ப்பாளர்கள் நன்கு படிததவர்களாக இருத்தல் வேண்டும். குறைந்தது அவர்கள் தமது தாய்மொழியில் எழுதப் படிக்கத் தெரிந்திருக்க வேண்டும்.

10. சவரமொழி பெயர்ப்பாளர் நன்கு படித்தவராயின் அவரைச் சவரக் கைதிகளுக்குப் பாடம் புகட்டும் பணிக்கு அமர்த்திக் கொள்ளலாம். சவரர்கள் தமது சொந்த மொழியில் மனுக்கள் அனுப்புவதற்கு அனுமதிக்க வேண்டும். மொழி பெயர்ப்பாளர் அவற்றை மொழி பெயர்ப்பார்.

11. சவரர்களிடையில் கல்வி வாய்ப்புப் பணியில் அரசாங்கத்துடன் உதவி புரிவதற்கெனவும் இடத் தொடர்பாளர்களை ஊக்குவிக்க வேண்டும். பயிர்த் தொழில் புரியாத சவரர்களுக்குத் துப்பாக்கிச் சுடல் போட்டி, குதிரைப் பந்தயங்கள் அமைத்து அவர்களை மாலை வகுப்புக்களுக்கு வருமாறு ஊக்குவிக்க வேண்டும்.

12. எல்லா முகவர் பகுதிகளிலுள்ள மாணாக்கர்கள் கல்வி வளர்ச்சியைத் தணிக்கை செய்வதற்கென ஒரு தனியான அலுவலரை நியமிக்க வேண்டும்.

இந்த ஆலோசனைகளை நாம் இந்நாட்களிலும் நடைமுறையில் கொண்டு வராமல் போனோம். சவரர்களுக்கு மட்டுமன்று, எந்த மலை வாழ்மொழிக்கும் நாம் சுதந்திரத்தின் பலனைக் கருதாமற் போயுள்ளோம். அவ்வவ்மலை வாழ்வோர் மொழிகளுக்கு அருகாமையிலுள்ள நாட்டு மொழியின் தாக்கத்தின் ஊறுடன் தத்தமது மாண்பினை இழந்து

வருகின்றன. இக்கண்ணோட்டத்தில் பந்துலு அவர்களின் ஆலோசனைகள் மொத்தத்தில் நாட்டிலுள்ள மொழியியல் ஆராய்ச்சியாளர்களெல்லாரும் ஆழ்ந்து சிந்தித்து ஆவன செய்யும் தேவை உள்ளது.

## ராமமூர்த்தியாரின் சமுதாய ஈடுபாடு.

"மக்களில் கல்வியைப் பரவச் செய்வதும் மக்களின் உடல் நலங்காப்பாற்றலும் மக்களது பொது நலம் பேணுதலும் சமுதாயத்திலுள்ள பெரியவர்கள் செய்ய வேண்டிய அறப்பணியென எண்ணிப் பார்க்கக் கூடாது. செல்வமிக்கவர்கள் கூட உடல் நலங்காக்க வேண்டுமெனில் மக்களின் உடல் நலமும் காப்பாற்றப் பெற வேண்டும்," என்பது பந்துலு அவர்களின் நோக்கு.

மேற் சொன்னதற்கேற்ப பந்துலு அவர்கள் பிறந்த சமுதாய இயல்பினை ஓரளவுக்கு ஒதுக்கி வைக்கலாம். அவர் இளமையெல்லாம் பத்தொன்பதாம் நூற்றாண்டில் கழிந்து போனது. அப்போதைக்கு 'சமஸ்தான'ச் சமுதாயம் மெல்ல மறையவும் 'பெருங்குடி'ச் சமுதாயம் அவ்வப்பொழுது தலையெடுத்திருந்தது. 'பெருங்குடி'ச் சமுதாயத்தின் சுதந்திர நோக்கு, மக்களின் பொது நலக் கோட்பாட்டுணர்வுகள் அக்காலத்தில் பெரும்பாலான மேதைகளைக் கவர்ந்தீர்த்த செய்தி உண்மையேயாயினும் பந்துலு அவர்களின் மனிதப் பண்பு நோக்கு பெருங்குடிச் சமுதாய வரம்பினைவிட ஓரளவுக்குத் தாண்டிச் சென்றதென மேற்கண்ட வாக்கியங்கள் தெரிவிக்கின்றன. அவர் செய்த 'சவர' ஆராய்ச்சியே இதற்கு எடுத்துக் காட்டு.

## சவரர் ஒலிச் சொல் ஆய்வு:

ப்ளீனி (கி.பி.77) 'சுஅரி' எனவும், தாலமி (கி.பி.130) 'சபரை' என அழைத்த 'சவர' இன மக்கள் ஐதரேய பிராம்மண நூலில் மகாபாரதத்தில், ராமாயணத்தில், கதாசரித சாகரத்தில், தெலுங்கு சாகித்தியத்தில் குறிப்பிடப் பெற்ற 'சபரர்'களே ஐரோப்பிய ஆராய்ச்சியாளர்கள் கொலேரியன், முண்டா, சந்தாலி, நிஷாதர் என்ற பெயரில் அழைத்தனரேனும், 'சபர' எனும் மூல இனத்தவர்க்குத் தொடர்புற்ற துணை இனைத்தவரது இவை என

எடுத்துக் காட்டலாம். ஆரிய திராவிடர்கள் பாரத தேசத்துக்கு வராத முன்னரே இந்நாட்டிலிருந்த பண்டைக் குடியினர் 'சவரர்கள்.'

## சவரப் பண்பாடு:

சவரர்கள் கஞ்சாம், விசாகப்பட்டினம் மாவட்டங்களில் மட்டுமின்றி ஒரிசா, வங்கம், சிங்பூமி, சம்பல்பூர், ராய்பூர், பலாஸ்பூர், பாட்னா, கலஹந்தி, சாரங்கர், ராயகர் முதலான மத்திய பீடபூமிப் பகுதிகளில் பரவியுள்ளனர். ராமமூர்த்தியாரும் சீதாபதியும், சவரர்களின் வாழிடங்கள், வீடுகளின் கட்டமைப்பு, உணவு, உடை, பண்டிகை முறைகள், அணிகலன்கள், மதம், தேவதைகள், தெய்வங்கள், கருமமுறைகள், தகராறு வேறுபாடுகள், கிராம ஆட்சி முறை, விதவைமணம், திருமணம், மணமுறிவு, திதி, சிராத்த முறைகள், சங்கீத சாகித்தியங்கள், அவர்களது சமுதாய உளவியல் முதலான அத்தனைப் பொருள்களின் மீதும் முழுமையாக ஆராய்ச்சி செய்தனர்.

சவரர்களின் திருமணங்கள் எவ்வாறு உறுதி செய்யப் பெறுகின்றனவென ராமமூர்த்தியார் விளக்கும் முறை மிகச்சிறந்ததாக உள்ளது. கள்ளுப் பானைகளின் சிறப்பிடம், மணமகளுக்கு ஒப்புதல் தரல், இவையெல்லாம் அப்பண்பாட்டின் லட்சணங்களைக் குறிப்பிடும் அம்சங்கள். அவ்வாறே கொடிய விலங்குகளின் குகைகளுள் நுழைந்தால் பலி கொடுப்பது, வீடு நல்ல வகையில் ஆகிவருமா வராதா என்பதை அரிசி மணிகளைக் கொண்டு சோதித்துப் பார்ப்பது, அவர்கள் புரியும் பயிர்த் தொழில் முறைகள், குத்தகைதாரர்களின் கீழ் சவரர்கள் படுகின்ற பொருள் வகையிலான இடையூறுகள், சவரர்களிடையில் சமுதாய அளவில் நெருங்கிய உறவில்லாமற் போனமை, இல்லத்து நிர்வாகத்தில் தாய், தந்தை, மகன் மூவரும் ஏற்றிருக்கும் பொறுப்புக்கள், -இவை அனைத்தையும் உருவப்படமாகத் தீட்டிக் காட்டுமளவுக்குத் தெளிவாக ராமமூர்த்தியார் தமது குறிப்பறிக்கையில் பதிவு செய்தார். சவரர்கள் மீதான அந்நூல் ஒரு முழு அறிவியல் தொகுப்பு.

1927இல் கிரியர்னல் 'லிங்குவிஸ்டிக் சர்வே ஆஃப் இண்டியா' (இணைப்பு 1-35இல் காண்க)(இந்திய மொழிகளின் அகழாய்வு) வெளியிடப் பெற்ற பொழுது பந்துலு அவர்களே

'சவரமொழிச் சிறப்புகள்,' 'தறுதலை மகனின் கதை மொழி பெயர்ப்பு' எனும் நூல்களை வழங்கினார். ராமமூர்த்தியாரின் பணி தெலுங்கில் அமைந்து விட்டதனால் ஐரோப்பிய ஆராய்ச்சியாளர்களுக்குப் பயன் பெறமாட்டாவென கிரியர்னல் எழுதினார். அதனாலேயே 1931, 1933, 1938இல் வெளியிட்ட சவர இலக்கியங்கள் ஆங்கிலத்திலேயே இருந்தன. தெளிவுறத் தெரியவில்லையாயினும் 1927இல் கல்கத்தாவில் அச்சிடப் பெற்ற "மாவட்டத் தொழிற் சங்கத்தினரின் சவர மொழிப் புத்தகத்"தில் கூட ராமமூர்த்தியாரின் கை பட்டிருந்ததென அறிஞர்கள் கருதுகின்றார்கள்.

அகராதியின் அமைப்பில் ராமமூர்த்தியாருக்கிருந்த விழிப்பும் அக்கறையும் இலக்கிய, சாஸ்திரீய நோக்கின் வழிகாட்டு நெறியுடையதாகும். 'குறிப்பறிக்கை' எனும் நூலில் அவர் ரெனரெண்ட், ஹாப்மன் (என்சைக்ளோபீடியா முண்டாரிகா) அவர்களைச் சான்றாகக் கொண்டு உருவகக் கூறுகளை வேறுபடுத்திக் காட்டியுள்ளார் எனச் சொல்லிக் கொண்டனர். பதங்களை இனப்படுத்துதலிலும், இலக்கண அங்கங்களை எடுத்துக்காட்டுதலிலும், தவறான நடைப் பொருத்தமற்ற உருவகங்களை உற்றறிவதிலும், வாக்கிய வேறுபாடுகளை, வழக்குச் சொற்களை, பழமொழி, பாடல்கள், கதைகள், உரையாடல்கள் என அத்தனையையும் ஒன்று திரட்டிச் சேர்த்ததோர் பேரிலக்கியம் அது. அந்நாட்களில் பல்கலைக் கூடப் பேராசிரியர்களில் பலபேருக்கு இந்த இலக்கியம் இருப்பது கூடத் தெரியாது.

சீதாபதியாரும் கூட சவரர்களைப் பற்றி மனிதப் பரிணாமக் கோட்பாட்டு நோக்கில் சிறிது ஆராய்ச்சி செய்தார். நாகப்பூரில் 1945இல் நடந்த விஞ்ஞான மாநாட்டில் சீதாபதியார், 'திராவிடர்கள், திராவிடரின் முற்காலப் பண்பாடுகள்' எனும் தலைப்பில் ஆய்வுக்கட்டுரை வாசித்தார். அக்கட்டுரையில் அவர் பர்லாகிமிடி, கோதாவரி என்ற சொற்கள் சவரமொழி மூலச் சொற்களிலிருந்து தோன்றியவை என்றார்.

சவர மொழி ஆராய்ச்சியாளர்களுக்கு ராமமூர்த்தியாரின் பெயர் எப்பொழுதும் நினைவு கூரத்தகுந்ததாகும். தர்ஸ்டன் தமது 'தென்னிந்திய இனங்கள், தெலுங்கர்' எனும் புத்தகத்தில் கிடுகு அவர்களின் கருத்துக்களைப் பல இடங்களில் பயன்படுத்தியுள்ளார். ஸ்டான்லி ஸ்டரோஸ்டா எனும் ஹவாய்

பல்கலைக் கூடப் பேராசிரியர் தமது சவரமொழியைப் பற்றிய ஒப்பிலக்கணத்தைப் பந்துலு அவர்களுக்குச் சமர்ப்பணமாக அளித்தார்.

## தொன்மைத் தெலுங்கு மொழி அறிவியலாளர்:

இலக்கண நூலறிஞர் மொழிப் பயனாக்கத்தில் சாது, அசாது உருவகங்களை உறுதி செய்கிறார். மொழியறிவியலாளர் அதற்கும் மேலாக சாது, அசாது உருவகங்களின் பின்னுள்ள மொழிக் கட்டமைப்பு, சொல்லாக்கக்கலை ஆகியவற்றை வரலாற்றுடனான வளர்ச்சியையும் விவரிக்க முயற்சி செய்கிறார். இந்த வகையில் கிடுகு ராமமூர்த்தியார் முதலாம் மொழியறிவியலாளராவார்.

தம் பணியிலிருந்து 1911இல் ஓய்வு பெற்றபின் ராமமூர்த்தி தெலுங்கு மொழியின் மீது மிகவும் ஈடுகொண்டு உழைத்தார். 1912இல் ஜோன்ஸ் ஒலியியல் நூலினைப்பற்றி அளித்த சொற்பொழிவுகளுக்கு, சீதாபதியுடன் கலந்து மதராஸுக்குச் சென்றபொழுது தெலுங்கு ஒலியமைப்பில் காணும் சிறப்பியல்புகளைக் குறித்து அறியச் செய்தார்.

பிட்டு-பிட்ட, பீகு-பீக, மெட்டு-மெட்ட, மேகு-மேக

புட்டு-புட்ட, கூடு-கூட, பொட்டு-பொட்ட, கோடு-கோட.

மேலே கண்ட சொற்களிரண்டின் இரண்டாம் சொல்லின் முதலெழுத்தில் ('பிட்டு'வில் பி) உயிர் எழுத்து உச்சரிப்பு, முதற் சொல்லின் முதலெழுத்தின் உயிரொலியைவிட ('பிட்டு'வில் பி) குறையுடையதாகிறது. இவ்விரு சொற்களில் முதல் சொல்லின் முதலெழுத்து முடிவமைந்தும் (closed), இரண்டாம் சொல்லின் முதலெழுத்து விரிவமைந்தும் (open) உள்ள இவ் வேறுபாட்டினைக் குறித்து ராமமூர்த்தி ஜோன்ஸுடன் உரையடினார்.

இவ்வாறாக ஜோன்ஸ் முதலானோரின் அறிமுகம் கடிதம் பதில் கடிதம் வாயிலாக வளர்ந்தது. 1914இல் ஐரோப்பியர்கள் தெலுங்கு கற்பதற்கிசைவான தெலுங்கு வாசகத்தை ஒலிக்குறி எழுத்துக்களைப் பயன்பெறச் செய்து எழுதியனுப்புமாறு ஜோன்ஸ் பந்துலு அவர்களுக்குக் கடிதம் எழுதினார். ஒலிக்குறி எழுத்துக்களுள்ள தட்டெழுத்துக் கருவியை அனுப்பிவைத்தால் நாம் அவ்வாறே அனுப்புவதாகப் பந்துலு பதில் எழுதினார்.

ஜோன்ஸும் அவ்வாறே அனுப்பிவைத்தார். தந்தையும் மகனும் தெலுங்கு வாசக நூலை வரைந்து லண்டனுக்கு அனுப்பினர். ஜெர்மனியிலுள்ள மொழியியல் அறிஞர்களுடன் விளக்கவுரை களுக்கென ஜோன்ஸ் அந்நூலினை ஜெர்மனிக்கு எடுத்துச் சென்றார். இதற்கிடையில் முதல் உலகப்போர் வந்தது. இப்போதைக்கு அந்நூல் அச்சிடப் பெறாமல் அப்படியே நின்றுவிட்டது. சீதாபதியார் 1933இல் லண்டன் சென்ற பொழுது ஜோன்ஸிடம் கிழிந்த நிலையிலிருந்த அந்நூலினைத் தொடக்கத்திலிருந்து தொகுத்தளித்தாராம். ஆனால் அந்நூல் இதுவரை வெளிவரவில்லை.

ஆட்டோ யெஸ்பர்சன் எழுதிய "ஒரு குறுகிய ஆங்கில இலக்கண" நூலையும்கூட ராமமூர்த்தி மொழி பெயர்த்தார். அதுவும் கிடைக்கவில்லை.

## தெலுங்கு மொழி போதனை:

1901இல் அப்போதைய கவர்னர் ஜெனரல் கர்ஸன் கல்வித் தொடர்புடையவர். அவர் மாநாடொன்றினை நடத்தித் தொடக்க நிலையிலிருந்து பல்கலைக்கூடம் வரையிலான கல்விமுறை எவ்வாறமைய வேண்டுமென ஓர் அறிக்கை தொகுத்தளிக்கச் செய்தார். 1903இல் ஓர் அறிஞர்கள் சங்கம் அமைத்து இந்திய மொழிகள் எந்த அளவுக்கு முன்னேற்றமடைந்துள்ளதென ஆராய்ந்தறிவிக்கக் கோரினார். அந்தச் சங்கத்தினர் இரண்டாண்டுகள் வரை நிலைமைகளைக் கண்டறிந்து, ஐரோப்பாவில் வளர்ச்சியடைந்துள்ள இன்றைய கல்வி, கலை, அறிவியல்களை இந்திய மொழிகளின் வாயிலாக மக்களுக்குக் கிடைக்கும் வகையில் கொண்டுவர வேண்டுமென எடுத்தியம்பினர். இந்தப் பிரதேச மொழி வளர்ச்சிக்கெனச் சென்னை மாகாணத்திலுள்ள வட மாவட்டங்களான கஞ்சாம், விசாகை, கோதாவரியை இணைத்து ஜெ.ஏ. ஏட்ஸ் எனும் பாடசாலை ஆய்வு அலுவலரைப் பணியிலமர்த்தினர். அவரின் அலுவலகம் விசாகப்பட்டினம்.

மார்க் ஹண்டர் அந்நாட்களில் ராஜமண்டிரியில் கல்லூரி முதல்வராக இருந்தவர். அவர் ஏட்ஸுக்கு ஒரு பதினைந்து நாட்கள் வரை போதனை முறைகளைப் பற்றியும், பிரதேச மொழிகளின் வளர்ச்சி முறைகளைப் பற்றியும் சொற்பொழிவுகளுக்கு ஏற்பாடு செய்தார். 'மொழிகள் முதலில்

தோன்றுகின்றன. பின்னரே அவற்றுக்கு இலக்கணக்கலை வரைகிறார்கள். மொழிகள் மாற்றமுறுவது போன்று இலக்கணங்களும் மாற்றமடைய வேண்டும்,' என ஏட்ஸ் தெலுங்கு மொழிப் பண்டிதர்களுக்கு வேண்டுகோள் புரிந்தார். சமுதாயத்தில் ஒரு மொழியைப் பேசிக் கொண்டிருக்கும் பொழுது, பண்டிதர்களும் ஆசிரியர்களும் தமது மொழி உரையாக்கங்களில் இன்னொரு மொழியை, இலக்கிய நடையை, ஏன் பயன்படுத்துகின்றனர் எனவும், அது பொருளற்ற செய்கையாக உள்ளது எனவும் அவ்ஐரோப்பிய அறிஞர் வியப்படையலானார். உண்மைதான்! ஆங்கிலத்தில் பேசும் மொழியும் எழுதும் மொழியும் ஒன்றாகவே உள்ளதல்லவா?

நாட்டின் மொழி போதகர்கள் இவ்வாறு எதற்கு எழுதுகின்றார்களெனத் தெரிந்து கொள்ள விரும்பி, விசாகப்பட்டினம் ஏ.வி.எல். கல்லூரி முதல்வராக இருந்த பி.டி. ஸ்ரீநிவாசய்யங்காரைக் கலந்துரையாடி, 'இதென்ன' என வினவினார். அவர் அப்பாராவையும் ராமமூர்த்தியாரையும் கலந்து பேசியறிந்து கொள்ளுமாறு கூறினார்.

அப்பாராவ் ஏட்ஸுடன் கலந்துரையாடினார். 'தாம் 1887இலேயே தமது கன்யா சுல்கம் நாடகத்தில் பேச்சுமொழி நடையைப் பயனுறச் செய்ததாகக் கூறி, பாடநூல்களிலாயினும், புத்தகங்கள் எழுதுவதாயினும், மொழி பெயர்ப்பு நூல்களாயினும், கல்வி போதனைக்காயினும் நடைமுறை மொழியைப் பயன்பெறச் செய்யப் பண்டிதர்கள் உடன் படமாட்டாரென' அறிவித்தார்.

ஏட்ஸ் ராமமூர்த்தியாரைக் கலந்து பேசினார். இவ்விருவரும் கலந்துரையாடிய பொழுது சீதாபதியார் கூறினார். "எம் மொழியிலும் பேச்சு மொழிக்கும் எழுதும் மொழிக்கும் இடையில் சிறிதளவேனும் வேறுபாடு காணக்கிடக்கிறது. ஆனால் தெலுங்கில் இவ்விரண்டிற்குமிடையில் காணப்பெறும் தொலைவு பிற எம்மொழியிலும் காணப்பெறவில்லை. உங்கள் ஆங்கில ஆசிரியர்கள் அறிவுள்ளவர்களானமையால் சமுதாயத்தினரின் மொழி மாற்றத்துக் கேற்ப இலக்கிய மொழியைக் கூட மாற்றிக் கொண்டு வந்தார்கள். ஒவ்வொரு மொழியிலும் காவிய நடையில் வழக்கத்திலல்லாத சில பண்டைய சொற்கள் காணக்கிடக்கின்றன. ஆயினும் உரையாடல் எழுத்து மொழியில் பண்டைச் சொற்கள் வந்துருளாமல் உங்கள் உரையாசிரியர்கள் அக்கறை

காட்டுகிறார்கள். தெலுங்கு உரையாசிரியர்களின் செயல்முறை இதுவன்று. பண்டைய இலக்கிய உருவகங்ளைப் பயனாக்கலை உரையாசிரியர்கள் ஒரு பெருமையாகக் கருதுகிறார்கள். பேசுமொழி நூல்களில் கூடப் பண்டைய சொற்றொடரினையும் சமஸ்கிருதச் சொற்களையும் சொல்லலங்கார வளமென எடுத்தாள முயல்கின்றனர். இச் செயற்கையான கடின நடையை அறுபதாண்டுகளாகவே சின்ன சூரியார் தமது நூல்களில் சேர்த்தெழுதத் தொடங்கினார். பாடசாலை நடையில் அந்நூல்களையே சிறுவர்களுக்குப் புகட்டுகிறார்கள். அந்த நடையிலேயே தேர்வுகளில் வினாக்கள் விடைகள் எழுத வேண்டுமென அவர்கள் வற்புறுத்தப் பெறுகிறார்கள்."

'ஆசிரியர் பாடத்தை வழக்கு மொழி நடையில் போதனை செய்தாலும் மாணாக்கன் மட்டும் மீண்டும் அந்த இலக்கிய மொழி நடையிலேயே விடைகள் எழுதுகின்றான். இந்த நிகழ்ச்சியனைத்தும் இப்போதும் எனக்கு நன்றாகத் தெரியும். ஆனால் என்ன செய்வது! நான் தேர்வுகளுக்கென சமஸ்கிருதம் படித்தேன். அதனால் தெலுங்கில் எனக்கு எந்தப் புலமையுமில்லை. நான் ஏதாகிலும் சொல்லக் கருதினால் 'உனக்கு காவிய மொழி தெரியாது. தெலுங்கில் புலமையுமில்லை. நீ பேசாதே,' எனச் சொல்வார்கள்' எனத் தெளிவாகத் தமது எண்ணங்களைக் கூறினார்.

'இப்பொருளைப் பற்றி என் கருத்துக்களைச் சொல்வற்கு இன்னும் உரிய காலம் தேவை' என்று கூடச் சொன்னாராம்.

இதனைப் பற்றி ராமமூர்த்தியாருக்கு 1906ஆம் ஆண்டுவரை தெலுங்கில் எந்த ஈடுபாடுமில்லையெனக் கொள்ளலாகாது. இல்லையெனில் சவரமொழியில் ஆற்றல் மிக்கவராக, வரலாற்றாய்வாளராக அவருக்குத் தெலுங்குப் பண்டிதர்களுடன் நேரடியான தொடர்பு இருந்திராது. அதனாலேயே இவ்வாறுரைத்தார்.

கிடுகு அவர்கள் 1906-1907ஆம் ஆண்டுகளுக்கிடையில் எண்ணங்கொண்டு ஏட்ஸ் ஏற்பாடு செய்திருந்த ஆசிரியர்கள் மாநாட்டில் (1907 மே, 1908 மே, 1910 மே) தெலுங்குப் பண்டிதர்களுக்கு, மொழிகள் மாற்றமடைகின்றன எனவும், மாற்றம் மொழிகளுக்கு இயல்பு நெறியெனவும் போதனை செய்வதில் 'வழக்கு மொழி'யைப் பயன் பெறச் செய்யவேண்டுமெனக் கருத்துரைகள் எழுதி வைத்துக்

கொண்டார். இதன் விவரங்கள் மற்றோர் அத்தியாயத்தில் விளக்குகிறேன்.

இங்கு நாம் குறித்துணரவேண்டிய அம்சம் வழக்கு மொழிநடையில் கல்வி புகட்டுதல் ஏன் அமைய வேண்டுமெனப் பந்துலு அவர்கள் வாதம் புரிந்த செய்தி.

"செருப்புத் தொழிலாளி வெங்கன் முதற்கொண்டு வெங்கட அவதானி வரையுள்ள ஆயிரத்தில் எழுபத்தைந்து பேர் மட்டுமே கூட்டிப் படிக்கத் தெரிந்தவர்களாக இருக்கையில் இலக்கிய மொழியறிவுள்ளவர் ஐவராகிலும் இருப்பரோ இராரோ! ஆயினும் நாகரிகமான தெலுங்கு, தெளிதெலுங்கு உலகப் பழக்கத்தில் இப்போது பேச்சு மொழியில் ஆயிரத்துக்குக் குறைந்த பகுதி நூறு பேராவது இருப்பார்கள். அதனைப் புரிந்து கொள்பவர்கள் ஆயிரத்துக்கு முன்னூறு பேராகிலும் இருப்பார்கள். முறை முறையாகப் பழக்கம் அதிகமாகவும் அவ்வளவுக்கவ்வளவு தாழ்ந்த இனத்தவர்களிடையில் மொழி பரவுகிறது. இந்தத் தெளிவான தெலுங்கில் தெளிவுண்டாக்கும் கல்வியை அனைவருக்கும் அளித்தால் சரஸ்வதி தெலுங்கு நாட்டினில் தாண்டவமாடுவார்!"

பந்துலு அவர்கள் 'நிலையிறுதி மொழி' (Standard language) எவ்வாறு ஏற்படுகின்றதெனும் பொருள் பற்றிக் கூறிய அம்சங்கள் மிகவும் குறிப்பிடத்தக்கவை. கல்வி போதனையில் வழக்கு மொழி ஏன் தேவையென்பதை அவர் இவ்வாறு உரைத்தார்:

"வாய்ச் சொல்லுக்கும் கையெழுத்துக்கும் பொருத்த நிலையிருப்பதனாலான பயன் ஒரு நாட்டவர் மற்றொரு நாட்டவர் மொழியைக் கற்றுக் கொள்ளல் எளிதாக இருக்கும். பேச்சுக்கு, ஆங்கிலேயர்களில் பலர் பிரஞ்சு, ஜெர்மன், இத்தாலியன், போர்ச்சுகீஸ், ஸ்பானிஷ் முதலான ஐரோப்பிய மொழிகள் அனைத்துமோ அன்றேல் ஒருசிலவோ வாய்ப்புக்கேற்பக் கற்பவர்கள் உள்ளனர். மற்றவர்களுடன் நெருங்கிய தொடர்பு கொள்வதனாலும், அம்மொழியை இலக்கியங்களிலும், செய்தித் தாள்களிலும் கண்ணால் கண்டு படிப்பததாலும், அவ்வாறே காதுக்கும், நாவிற்கும், கண்ணுக்கும் மற்றும் கைக்கும் பழக்கமாகி வேற்றுமையின்றி ஒரே வடிவமான மொழி உள்ளத்தில் நிலை பெறுகிறது. உலக நடைமுறைகளில் ஈடுபாடின்றி இலக்கியத்திலிருக்கும் மொழியை மட்டும் அதன் அமைப்புகளையெல்லாம் கற்றறிந்தாலும் பழக்கத்திலாக்கிக்

கொள்ளல் எளிதன்றென்பது எல்லாரும் அறிந்த ஒன்றே... பழக்கத்தில் வரும் மொழியே எழுத்து வடிவிலும் இருந்தால் எழுத்துக்களை மற்றும் கற்றுக் கொண்டால் போதும். அம்மொழியைப் படிக்கலாம்; எழுதலாம்."

"விடுதலையாட்சி வேண்டுமென்கிறோம். தனி ஆந்திர மாநிலத்துக்கென முயற்சிக்கிறோம். மக்களாட்சியமைப்பு வேண்டுகிறோம். இத்தகைய சூழ்நிலைகளில் நமது மக்களுக்கு, எளிய மனிதர்களுக்கு எம்மொழியின் வாயிலாக அறிவு புகட்ட வேண்டியுளதோ, அம்மொழியில் நூலாக்கம் புரிய வேண்டுமென்பதை எண்ணிப் பாருங்கள்!"என்பதே அவரது இறுதி வேண்டுகோளாகும்.

இதுமட்டுமன்று.

"மக்களின் நடைமுறை மொழியின் பயன்களை ஒப்புக் கொள்ளாத பண்டிதர்களின் கைகளிலுள்ள கூரிய அங்குசத்தை வீசி எறிந்தாலன்றி மக்கள் உரிமையை மறுத்துவரும் அரசாங்கம் அவர்கள் கரங்களிலுள்ள கூரிய அங்குசத்தை விட்டெறிந்தாலும் பயனேதுமிராது. இன்று ஆந்திர மாநிலம் ஏற்பட நேரிடும். நாளை சுதந்திரம் கிடைக்கலாம், அரசராட்சி மக்களாட்சியாகவும் வரலாம். ஆனால் இந்நாட்களில் நமது பெருமக்கள் எழுத்தறிவற்ற குருடராக இருப்பின், நாட்டுக்கு எத்தகைய இன்னல்கள் நேருமென நமது நாட்டுத் தலைவர்கள், நாட்டுப் பற்றுடையவர்கள், நாட்டின் நட்புறவாளர்கள் நன்றாக எண்ணிப் பார்க்க வேண்டியுள்ளது, நமது தெலுங்கர்களிடையில் நூற்றுக்குத் தொண்ணூற்றுவர் இன்னும் 'அரி ஓம்' ஆகிலும் கற்க வேண்டியுளதே!"

என்றிவ்வாறு, இன்றைய நிலைமையை ஜோதிடம் கூடச் சொல்லலானார். ஒரு காங்கிரஸ் செயலாளரிடம் 'நீங்கள் பிரசுரம் செய்யும் கைப்பிரதிகளைப் பாமர மக்கள் படித்தறிய வேண்டுமானால் வழக்கு நடை மொழியில்தான் படிப்பறிவு புகட்ட வேண்டும்,' என்று சொன்னார். எனவேதான் வழக்கு நடை மொழியை அவர் ஒரு சமுதாயக் கண்ணோட்டத்துடன் பிரசாரம் செய்தாரென்பதை நாம் உணர்ந்து கொள்ள வேண்டும்.

இக்கண்ணோட்டத்தின் பொருளுணராதவர்களே அவரைச் சூழ்ந்திருந்த பண்டிதர்கள் அனைவரும். எனவேதான் அவர்களுக்குப் பொருள் விளங்கும் மொழி நடையில் தமது வாதத்தைக் கூறக் கருதினார். அதற்கென 1908-1910ஆம்

ஆண்டிற்கிடையில் அவர் செய்த பணி, மாணாக்கர்கள் கற்ற படிப்பனைத்தும் பரீட்சைக்கெனவே படித்ததைப் போன்ற படிப்பினைதான். செய்தித்தாள்கள் முதல் வேத உபநிஷத்துக்கள் வரையுள்ள அனைத்திலக்கியம் முழுமையாகத் தெரியாதெனச் சான்று காட்டினார்.

## கிடுகு அவர்களின் போதனைத் திறமை:

இன்றைய யுகத்தில் தம் சீடர்களில் சிறந்த போதகர் விஸ்வநாத சத்யநாராயணா அவர்கள். அவரின் குரு செல்லப்பிள்ளை வேங்கடசாஸ்திரியாவார். அத்தகைய பேராற்றல் மிக்க பேரறிஞர் கிடுகு அவர்களின் புலமையைப் பற்றி இவ்வாறு புகழுரை தந்துள்ளார்.

"...நன்னயபட்டர் முதலாக இன்றுவரை வெளிவந்த மொழியறிஞர்கள் இடையில் எவருக்குமே கிடுகு பந்துலுக்குத் தெரிந்த அளவு, பெருங்கவிஞர் நன்னய பட்டரின் மொழியாட்சித் திறமை தெரிந்திராதெனவும், எந்த நிலையான சொற்சான்று கிடைப்பினும் அந்த உறுதிச் சான்றினைக் கூறத் தயங்கேன்... அது எங்கிருந்து வந்த ஆராய்ச்சி அறிவாற்றலோ! ஒவ்வொரு ஒலியையும் எடுத்தாண்டு இனப்பாகுபாடு செய்து இலக்கண வகையாக எழுதத் தொடங்கினால் அவ்வாறே எழுத இயலும். அதனையே எழுதும் ஆற்றல், எழுதியவற்றில் ஓர் எழுத்துக் கூட குற்றமற்றவகையில் இராது. அது எங்கிருந்து கிடைத்த புலமையோ! உண்மையில் இலக்கியக் கவிஞர் எனப் பெயரிட்டுக் கொண்டுள்ள அனைவரும் மனசாட்சிக்கு வஞ்சனையற்றவராயின் அத்தகையோர் பேரரங்கம் ஒன்றினைக் கூட்டித்தமது விருதுகளனைத்தையும் பந்துலு அவர்களிடம் சமர்ப்பித்து, அவர் அவற்றுக்கு ஒப்புதலளித்து மீண்டும் கொடுப்பாரேயானால் அலங்காரத்துக்காக வேண்டுமானால் அணிந்து கொள்ளலாம். இல்லையெனில் அவற்றை அப்புறப்படுத்த வேண்டியதே."

## சிற்பம் – காமக்கலை நூல்:

ராமமூர்த்தியார் சரசர். ஆனால் பார்ப்பவர்களுக்கு அவரிடம் மொழிப்பற்றும் கலைப்பற்றும் நீங்கலாக வேறேதும் காணப் பெறமாட்டாது. ஸ்ரீநிவாச சிரோமணியார் ஒருமுறை

ராஜமண்டிரி சென்றாராம். பந்துலு அவர்கள் பாலி மொழியில் 'மகாவம்சம்' படித்துக் கொண்டிருந்தாராம். மற்றொரு முறை சிரோமணியார், பந்துலு, தல்லாவங்கல சிவசங்கர சாஸ்திரியார். மூவரும் சேர்ந்து பயணம் செய்து கொண்டிருந்தனர். பந்துலு நெடுநேரமாக இலக்கணத்தைப் பற்றியே பேசிக் கொண்டிருந்தமையால் இவ்விருவருக்கும் சலிப்புத் தோன்றியது. எத்தகையோராயினும் சிருங்காரரசனை உரையாடலென்றால் தம்மை மறந்து விடுவாரென்றறிந்திருந்த சாஸ்திரியார் தெலுங்குப் பிரபந்தங்களிலிருந்து காதல் காட்சிகள் பற்றிய உரையாடலைத் தொடங்கினார்.

உடனே பந்துலு சட்டென்று முன்வந்து, "நான் ஆங்கிலத்தில் பாலுறவுப் புத்தகங்களைப் படித்திருக்கிறேன். ஹெவலிக் ஹெல்லிஸ் எழுதிய புத்தகங்களெல்லாம் படித்தேன். அத்துடன் சும்மாயில்லை. அயினாக் பிளாக் புத்தகங்களைப் படித்தேன். அவர்கள் சொல்கிற யாவையும் எதுவரைக்கும் உண்மையென்று மனிதர்களை ஆய்ந்தறிந்து வந்தேன். அவர்கள் சொன்னதனைத்தும் பெரும்பாலும் அனுபவத்தினால் வந்தவை" என்று பாலியல் பாடம் தொடங்கிவிட்டார்.

ஒரு நண்பன் ஓவியம் வரைபவர். 'ஓவியம் வரைவதில் நிர்வாண நிலை எப்படி வந்தது' என வினவினார். கோபிநாதராவ் எழுதிய 'சிற்ப வடிவமைப்பியல்' நூலினைத் தாம் படித்ததாகவும் கூறிப் பந்துலு அவர்கள் சிற்பங்கள் மீதொரு உரையாடலைத் தொடங்கி விட்டார்.

பி. டி. பஸு எனும் வரலாற்றாசிரியரின் 'கிறிஸ்தவ சாம்ராஜ்யம்' எனும் நூலினைப் பற்றிப் பேச்சு வருகையில் "பஸு இந்திய நாட்டு வரலாறு எழுதும் பணியை விட்டு வெல்லஸ்லி சொந்த விவகாரங்களைப் பற்றிக் கொண்டு அரசியலுக்கு முடிபோடும் வேலை வரலாறாகாது. அது வரலாற்றாசிரியன் பணியன்று," எனத் தமது கருத்தினை அறுதியிட்டுச் சொன்னார். சிப்பாய் கலகப் போரினைக் குறித்து பஸு எழுதாமற் போனமையைக் குறிப்பிட்டுக் கூறி, 'ஜான் வில்லியம் கேயே மூன்று பதிப்புக்கள் எழுதினார் எனவும் கேயேயின் கருத்துக்கள் தவறானவையெனவும் மாலிசன் இரண்டு பதிப்புக்கள் எழுதினார்' எனவும் பந்துலு சொன்னாராம்.

அவ்வாறு அவர் ஒரு நடமாடும் கலைக் கூடம், கலைக் களஞ்சியம் போன்றிருந்தவர் என ஒரு நண்பர் எழுதினார். 'தெலுங்கு கீழை நாட்டு இத்தாலிய மொழி' என ஏன்

சொன்னார்களெனத் தெரியச் செய்யுமாறு கேட்க, அதற்குப் பந்துலு அவர்கள் இவ்வாறு எழுதினார்:

"நெடுங்காலத்துக்கு முன்பு ஏதோ பத்திரிகையில் பார்த்திருக்கிறேன். சில ஐரோப்பிய வழிப் போக்கர்கள் தெலுங்கு தேசத்தில் சுற்றுப்பயணம் செய்கையில் பெண்டிர்கள் ஏரிக்கரையின் மீதும், வயல் வெளிகளிலும் பேசியதைக் கேட்டு அவர்களின் மொழியொலிக் கொத்ததாயிருந்ததென்றும், இத்தாலிய மொழியோசையைப் போன்று பாட்டுக்களும் மனம் மகிழும் வண்ணமிருந்த தெனவும் புகழ்ந்தார்களாம். இந்தப் புகழ்ச்சி இலக்கியநடை ஆந்திர மொழிக்கு உரியதாகாது. மேலை நாட்டவர்களல்லவாஅவ்வாறு புகழ்ந்து கூறியது. அவர்கள் காதில் விழுந்த மொழியைப் புகழ்ந்தார்களேயன்றிப் புத்தகங்களில் எழுதியிருந்ததையன்று..."

(முகவரியில்லாத கிடுகு அவர்களின் கடிதம், 20.3.38.)

அவருடைய தர்க்கம் புரியும் ஆற்றல் மிகவும் அதிகம். அதனாலேயே அவருடைய புலமை 'தெளிவான விடை' யளிப்பதாகவும், பொருளற்ற குழப்பம் தராததாகவுமிருந்தது.

இத்தனை வகையான கலைகளில் தேர்ந்த புலமை இருப்பினும் பந்துலு அவர்களுக்கு மொழியறிவியலில் மட்டுமே உயிர் நாடியாக நிலைத்துவிட்டது. அதனாலேயே 1912இல் குரஜாடா அப்பாராவ் அவர்கள் ஆந்திரப் பல்கலைக்கூடத்திற்கு ஒரு கடிதம் எழுதி ராமமூர்த்தியாரை 'ரீடராக' (ஆய்வுரை யாளராக) பணியிலமர்த்தக் கோரலானார்.

"நமக்குத் தெரிந்த வரைக்கும் பாரத நாட்டவராயினும் ஐரோப்பியர்களாயினும் தெலுங்கு மொழியை அறிவியல் கூறுகளுக்கேற்ப ஆராய்ச்சி செய்துள்ளவரெனச் சொல்லத் தக்கவர் கிடுகு வேங்கட ராமமூர்த்தி பந்துலு அவர்கள் ஒருவரே. கலை இலக்கியத்துறைகளில் மொழியியல் வளர்ச்சியைச் செயலாக்க நெடுங்காலமாக உழைத்த அறிஞர் அவரன்றி வேறெவருமிலர்."

கிடுகு அவர்கள் பல்கலைக் கல்லூரிக் கூடத்தின் பேராசிரியராக இருந்திருப்பின் எத்தனை நன்றாக இருந்திருக்கும்!

# அத்தியாயம் மூன்று

## கலைநிறைவாளரின் சொற்போர்கள்

பந்துலு அவர்களின் வாழ்க்கையின் பெரும் பகுதியைக் கவர்ந்து கொண்டது சவரமொழி ஆராய்ச்சியோடன்றி, மிகவும் புகழ் பெற்றுத் தந்தது அவருடைய வழக்கு மொழிப் பிரசாரம். செய்தித் தாள்களில் 1838 முதல் தொடங்கி வழக்கியல் மொழி வந்தருப்பினும் 'ஹிதசூசனி' (1862இல் அச்சானது) யில் உரைநடையாக்கத்துக்கு வழக்கு மொழி எவ்வாறு துணையாயிற்றென சாமினேனி முத்து நரசிம்மம் நாயுடு விவரித்திருப்பினும், விரேசலிங்கம் தமது நாடக அரங்கேற்றங்களில் (1880-1890) நாட்டு மொழியைப் பயன்பெறச் செய்யினும், குரஜாடா கன்யா சுல்கத்தை (1897) வழக்கு மொழியமைப்பில் எழுதினாலும், அது 'கிராமிய மொழி' எனக் கருதும் பண்டிதர்களின் ஒருதலைக் கருத்துக்களை மறுத்துச் சாடி அவர்களை ஒப்பச் செய்து வழக்கியல் மொழியமைப்பைக் காவியப் பயனாக மாற்றியவர் மட்டும் கிடுகு அவர்களே.

"ஆனால் அந்நாட்களில் ஒரு தலைவன் தேவையானான். இருதரப்பினரின் வலிமை, திறமைகள் அறிந்து அச்சமின்றி மெதுவான ஆளுமைத் திறமையுடன் ஒவ்வொரு நூலிலிருந்து உரைநடை, கவிதை, செய்யுள் இவற்றின் பயன்பாடுகளின் சிறப்புக்களை எடுத்துக் காட்டி அவர்களைக் கண்டனம் செய்து, நட்பு மரியாதைகளை நிறுத்திக் கொண்டு அவர்களை முற்றிலுமாக ஒப்புக் கொள்ளச் செய்யும் பேரறிஞர் தேவையானார். அத்தகையோரிடையிலும் உள்கருத்துக்கும் மேலான ஓர் ஆழ்ந்த விளக்கம் உள்ள உண்மைப் பற்றுள்ள ஒருவர் தேவையாக இருந்தது. சிதறிப் போயிருந்த அந்நாட்களின் படைப்பாளர்கள் ராமமூர்த்தியிடம் அத்தகைய தலைவனைக் கண்டார்கள்," என ஜெ. ஏ. ஏட்ஸ் 1933இல் எழுதிய 'நினைவுகள்' எனும் ஆங்கிலக் கட்டுரையில் ராமமூர்த்தியின் தலைமைக்குரிய சிறப்புக்களை நினைவு கூர்ந்தார்.

இதுபோன்று ஏட்ஸ் போன்ற மற்ற ஐரோப்பிய அறிஞர்களைப் பந்துலு அவர்களின் தம் சொந்தக் கருத்தார்வமும் மனிதப் பண்புடைமையும் கவர்ந்தீர்த்தன. நிலையான உழைப்பு, அறிந்தாளும் ஆழ்ந்த திறமையுடன் பந்துலு அவர்களுக்கு மிகச்சிறந்த வகையில் சொற்பொழிவாற்றலும் இருந்தது. பேச்சுக்களிலே எத்தனை கூர்மைத் தெளிவிருந்ததோ அவருடைய வாக்கியங்களிலும் அத்தனை வளமைக் கவர்ச்சி இருந்தது. ஆழ்ந்த வலிமை இருந்தது. இவ்வாறு ஒரு மனிதரிடத்தில் கலைகளின் பேரறிவு, பேச்சுத் திறமை இரண்டும் கலந்திருப்பதென்பது மிகவும் அரியதோர் இயல்பெனவும் ஏட்ஸ், தமது கட்டுரையில் எடுத்தியம்பியுள்ளார்.

அவர் சொற்போர்களைச் செய்தாராயினும் அவருக்குத் தம் பகைவர்களான மரபு வழி போற்றும் பண்டிதர்களிடையில் இலக்கியச் சாராம்சம் பொருத்தமட்டில் தகராறில்லை. தமக்கு எதிர்வாதியாக இலக்கியப் புரட்சியை நிகழ்த்திய ஜெயந்தி ராமய்ய பந்துலுவிடம் கூட அவருக்கு நட்பு கெடவில்லை. இல்லையெனில் அவருடன் சேர்ந்து மதராஸில் நிழற்படம் எடுத்துக் கொள்வாரா! ஆனால் சொற்பொழிவாற்றுவதற்கு நின்றாராயினும், கட்டுரையோ கையெழுத்துப் பிரதியோ எழுதுவதற்குத் தொடங்கினாராயினும் மாபெரும் அறிஞர் பேராசிரியர்களாயினும் கணக்கில் கொள்ளும் மனப் போக்குடையவர் அல்லர் அவர்.

அதனாலேயே அவர் வழக்கு மொழிப் புரட்சியின் ஆதரவுக்குத் தலைமைப் பொறுப்பேற்கும் வெற்றி கொண்டவரானார். ஏட்ஸ் ஊக்குவிப்புடன் ஆசிரியர்கள் பேரவையில் (அக்டோபர் 1907) பேசுவதற்கு முன்பே அவர் தெலுங்கு இலக்கியங்களின் மீது ஒரு கண் வைத்து அறிந்து வந்திருக்கலாமெனத் தெரிகிறது. சவரப் பண்பாடு, மொழி ஆராய்ச்சிகளின் வாயிலாக அவருக்கு மொழிகளில் உயர்வு தாழ்வு வேறுபாடுகள் இல்லையெனத் தெரிந்தது. சவரர்கள் அனைவரும் ஒரே நடைமுறையில் தான் பேசுகின்றார்கள். தெலுங்கு மொழியில் அவ்வாறில்லாமல் இரண்டு வகை நடைமுறைகளிருக்கின்றனவென்றால் வரலாற்றில் வந்த வளர்ச்சி மாற்றங்களினால் இவை ஏற்பட்டனவேயன்றி, தெலுங்கு மொழிக்குங்கூட இது இயல்பானதென்ற தெளிவுற்ற கருத்தினை அவர் ஏற்படுத்திக் கொண்ட காலத்தில்தான் அவர் ஆசிரியர்கள் பேரவையில் உரையாடலானார்.

கிடுகு அவர்களின் சொற்போர்களை மூன்று காலநிலைகளில் விளக்கம் செய்யலாம்.

## முதற்கால நிலை (1906 – 1910)

இக்காலத்தில் குரஜாடா கிடுகு இருவருக்கும் வேட்டூரி பிரபாகர சாஸ்திரியுடன் அறிமுகம் தொடங்கியது. இதுவரை தெரிந்திருந்த சில நிகழ்ச்சிகளை வைத்து அப்பாராவுக்காகிலும் ராமமூர்த்திக்காகிலும் தெரியாத ஒரு நிகழ்ச்சியைப் பிரபாகர சாஸ்திரி தெரியச் செய்தார்: 'நமது முன்னோர்கள் கிரந்தத் தொகுப்புக்களுக்கென ஒரு மொழி, கவிதை உரை நடைகளுக்கென ஒரு மொழி பயன்பெறச் செய்தனரெனவும், பாடல்கல் எழுதியமை வழக்கு மொழியெனவும், அவற்றை இலக்கிய மொழியாக்கம் செய்து புத்தகங்களாக வெளியிட்டவர்கள் தீங்கிழைத்து வருகின்றனர்,' என்றார்.

இக்கருத்து தமது சவர மொழியாழ்ந்த அறிவினால் ஏற்பட்ட எண்ணங்களுக்கிணையாகவே உள்ளது. எனவே தம்காலத்தியவரான பண்டிதர்கள் செய்துவரும் ஒலி இலக்கண அமைதி, வழு (சாது, அசாது), சொல்லிலக்கணம் (மீமாம்சம்) மிகவும் பொருள் வேறுபாடானவையெனப் பந்துலு அவர்கள் இந்தக் காலநிலையில் குறிப்பிடலானார். அதற்காகவே ஆசிரியர்களை நாடும் குறிக்கோளைக் கொண்டு, தமது கருத்துக்கிணங்கும் வகையில் மாற்றம் செய்வதற்கென, 'மொழிகள் மாறுகின்றன, தெலுங்கும் அப்படியே' எனத் தமது சொற்பொழிவுகளில் விளக்கிக்கூறி உலக மொழிகள் வரலாற்றில் ஆசிரியர்களுக்கு முன்னறிவைத் தோன்றச் செய்து, வேலையுடன் வேலையாக வழக்கு மொழி நடையில் புத்தகங்களை மாணாக்கர்களுக்கென வரையுமாறு வேண்டினார்.

## இரண்டாம் கால நிலை (1910 – 1914)

ராமமூர்த்தியாரின் விருப்ப வேண்டுகோள் ஆசிரியர்களைக் கவர்ந்தது. ஆனால் கொம்பு முற்றி வளைந்து போன மரபுவழிப் பண்டிதர்களை அதிரடிக்கச் செய்தது. 1910இலேயே அப்பாராவ் அவர்கள் 'கிராமியச் சொற்கள் விரிவிளக்கம்' எனும் கட்டுரையை வெளியிட்டு வழக்குமொழியும் கிராமிய மொழியும் ஒன்றல்லவென்றும், கிராமிய மொழி

இலக்கணத்துக்குப் புறம்பாகப் பயன் படுத்தலாமாயினும், வழக்கு மொழி என்பது இலக்கணத்தைச் சார்ந்ததே என எடுத்துரைத்தார். 1911இல் ஸ்ரீநிவாசய்யங்கார் 'லாங்மன்ஸ் கணிதப்பாடம்' எனும் கணக்குப் புத்தகத்தையும், செட்டி லக்ஷ்மி நரசிம்மம் அவர்கள் 'கிரீக் புராணக் கதைகள்' எனும் புத்தகத்தையும் மாணாக்கர்களுக்கென எழுதினர். ஆயினும் இன்னும் வழக்குமொழி நன்றாக வழக்கத்தில் வராமற் போனமையால் அவை ஒருபுறம் இலக்கிய மொழியாகவும் மறுபுறம் வழக்கு நடைமொழியாகவும் இரண்டுமின்றிப் போராட்ட வலிமைக்கு உதவி செய்தது. வாவில கொனு சுப்பாராவ் இந்த நூல்களின் மீது கொடியேந்தி இவற்றிலுள்ளது கிராமிய மொழியே என வாதிடலானார். அப்போது அய்யங்கார் 'பிரதேச மொழிகளின் உயிரோட்டங்களின் ஓர் வேண்டுகோள்' எனும் கையழுத்துப் பிரதியை 1912இல் வெளியிடலானார். இக்காலக் கல்வி போதனைக்குத் தகுந்தது வழக்கு மொழியே என எடுத்தியம்பலானார். அந்த ஆண்டிலேயே விஜயநகரத்தில் 'ஆந்திர சாரஸ்வத சங்கம்' ஏற்பட்டது. ஏட்ஸ் தலைவராகக் கொண்ட 'தெலுங்கு போதனை சீர்திருத்தச் சங்கமும்' ஏற்பட்டது. இவ்விரண்டிலும் அப்பாராவ் ராமமூர்த்தியார் தலையாய செயற் பொறுப்பாளராயினர்.

இத்துடன் மதராஸ் மாகாணம் முழுமையும் ஒரு விழிப்புணர்வு தொடங்கியது. பிட்டாபுரம் ஜமீந்தார் சூர்யாராவின் முயற்சியால் இலக்கிய வாதத்தை வற்புறுத்தும் சங்கம் ஒன்று அமைக்கப் பெற்றது. ஜஸ்டிஸ் கட்சியைச் சேர்ந்த மதராஸ் தியாகராஜ செட்டி போன்ற பெரியார்களின் கெடுபிடியுடன், ஜெயந்தி ராமய்யா பந்துலு எனும் நீதிபதி இலக்கிய மொழி வாதத்தை வற்புறுத்தினார். 1911 – 1912இல் 'ஆந்திர சாகித்திய பரிஷத்' காக்கி நாடாவில் ஏற்பட்டது. வேதம் வேங்கடராய சாஸ்திரி, காசிபட்ட பிரம்மய்ய சாஸ்திரி, வாவில கொனு சுப்பாராவ் முதலான பெருமக்கள் இதனில் உறுப்பினராயினர். 1912இல் ஓர் அறிஞர்கள் பேரவை நடத்தினர். ராமமூர்த்தி அப்பாராவ் கூட அழைக்கப் பெற்றனர். அங்கு ராமமூர்த்தியார் தெலுங்கு மொழி வரலாற்றின் மீது ஒரு கட்டுரை வாசித்தார். சபையில் அனைவரும் எதிர்தரப்பினர்தாம். ஆனால் பேரிகாசிநாத சாஸ்திரியார் எனும் சமஸ்கிருதப் பேராசிரியர் ஒருவர் மட்டும் ராமமூர்த்தியாரின் வாதம் பொருத்தமாயுள்ளதென்றார்: 'இவ்வேற்றுமை வேதமுறை, உலக வழக்கு, பண்பாட்டு வேறுபாடு போன்றதே' என்றார்

சாஸ்திரியார். ராமமூர்த்தியின்வாதத் திறமைக்குப் பெருமை கிட்டியது.

அந்நாட்களில் இலக்கணப் பெருந்தகையாரெனப் போற்றப் பெற்றவர் மகாமகோபாத்யாயர் தாத்தா சுப்பராம சாஸ்திரியார். சாஸ்திரியார் கூட ராமமூர்த்தியாரைப் புகழ்ந்தார். கடுமையான பண்டிதர்களும் ராமமூர்த்தியின்பால் கருத்தொருமிக்கக் கருதினாலும் 'இலக்கிய மொழி வாதிகள்' மட்டும் ராமூர்த்தியுடன் போராட்டத்திற்கு எழலாயினர். ஆனால் அரசாங்கம் இன்னும் வழக்கு மொழி நடைக்கே ஆதரவாக இருந்தது.

அதனால் இலக்கிய மொழிவாதிகள் வழிமுறைகளைத் தேடிக் காணலாயினர். 1912 ஆகஸ்டு மூன்றாம் தேதி மதராஸ் ஆளுநர் சர் முர்ரே ஹோமிக் அவர்களுக்கு ஒரு மனு செய்தனர். இலக்கிய, வழக்கு மொழி நடைகளில் மாணாக்கன் தனக்கு விருப்பமான வகையில் எழுதுமாறு வாய்ப்பளிக்கக் கோரினர்.ஆளுநர் இவர்கள் கோரிக்கையை ஏற்றார். அதன் பின்னர் அரசாங்கத்துடன் தமது செல்வாக்கினைப் பயன்படுத்தி ஒரு பாடசாலை மொத்தத்தில் எந்த நடையைக் கோருகின்றதோ அந்நடையில் எழுதலாமென்ற ஒப்புதலாணையைப் பெற்றனர். ராயலசீமைப் பகுதிகளிலுள்ள பெரும்பாலானோர் இலக்கிய மொழி நடையை ஏற்றார்கள். பாடசாலை ஆசிரியர்களில் பலபேர்களுக்கு வழக்குமொழி என்றால் என்னவென்றோ, ராமமூர்த்தியாரின் கருத்துக்கள் என்னவென்றோ எதுவும் தெரியாது. இது 'கொடியவர்களின் கடுஞ்செயல்' செய்த கொடுமையெனப் பரவலாகப் பேச்சும் தொடங்கியது. அதனால் 'வழக்கு மொழி' வாதம் மீண்டும் தோல்வியடைந்தது.

தாம் சொல்ல நினைத்தவற்றை இலக்கிய வடிவத்தில் வெளியிட்டு, சொற்போர்களின் வழியாக விளக்கினாலன்றி அறிஞர்களிடையில் கலந்துரையாடல் இயலாதெனக் கூறினார் ராமமூர்த்தி. அதற்காகவே 'கிராமியச் சொல் பயன்பாடு' (1912) எனும் கட்டுரையை, 'இன்றைய தெளிதெலுங்கு' (1913) எனும் மற்றொரு கட்டுரையை வெளியிட்டார். தாம் இலக்கிய மொழியின் அமைப்பை அறிந்துதான் இந்த வாதத்தைச் செய்வதை எடுத்துக் காட்டுவதற்கென 'பண்டைத் தெலுங்கு வளம்' (1913) எனும் நூலினை வரைந்தார். உடனுக்குடன் ஆங்கிலத்தில் 'நவீன தெலுங்கினைப் பற்றிய ஒரு நினைவுக்குறிப்பறிக்கை' எனும் நூலினையும் வெளியிட்டார்.

அந்நூலிலுள்ள சில கருத்துக்களைக் காண்போம்.

1. அரசாங்கத்தினர் என்னவோ தாய்மொழியில் கல்விப் புரட்சி பெற வேண்டிச் சிறார்களின் புத்தகங்களில் மட்டுமின்றி, அரசாங்க அதிகாரிகள் மக்களுக்கு எழுதும் கடிதங்களிலும், அனுப்பும் செய்தியறிவிப்புக்களிலும் புத்தகங்களிலும், கைக் கடிதங்களிலும், வர்த்தகம், விவசாயம், துப்புரவு முதலான துறைகளிலும் எளிய மக்களுக்குத் தெரியச் செய்வதில் அனைத்து அரங்குகளிலும் வழக்கு மொழிதான் பயன் பெறவேண்டுமெனக் கூறுகின்றனர். ஆனால் பண்டிதர்களெல்லாம் சமஸ்கிருதத்தின் மீதே அக்கறை காட்டுகின்றனர். தெலுங்கினை மேம்படுத்த வேண்டுமென்ற ஆர்வம் அவர்களுக்கில்லை.

2. கிரியர்னல் உரைத்ததைப் போன்று மக்கள் ஈடுபாடுகளுக்குத் தொடர்பற்ற காவியநடையின் விளைவால் ஏறத்தாழ பெரும்பாலான மக்களுக்கு இலக்கியத்தில் எவ்வளவுக்கும் தொடர்பில்லாமல் போயிற்று. சர். தாமஸ் மன்ரோ 1882இல் மொழி புகட்டும் துணைக் கருவிகள் பால் கூறிய கூற்றுக்களில் இந்நாளிலும் எந்த மாற்றமும் வரவில்லை. அவர் விரும்பிய கருத்துக்கள் இவை: அ. மாணாக்கன் தான் எளிதாகவும், ஆழ்ந்தும், சரியாகவும் ஏதாவது சொல்வதற்கும் எழுதுவதற்கும் மொழி போதனை துணைபுரிய வேண்டும். ஆ. மனதில் நினைத்ததைத் தானாகவே சொல்லும் வகையில் உதவவேண்டும். இ. விருப்பமில்லாதவர்களுக்கு, விருப்பமற்ற நோக்கத்துடன் கூறும் வகையில் அவர்களைச் செய்ய வேண்டும். ஈ. முறைப்படியான சிந்தனைக்கு மாணாக்கன் பழக்கம் பெறுமாறு செய்தல் தேவை. உ. உண்மை நிகழ்வுகளைக் குறித்து ஊக்கம் பெறும் ஆற்றல், உலக அறிவு மாணாக்கனுக்கு வளர வேண்டும். ஊ. ஒரு பொருளின் மீதான நோக்கம் சிதறாமல் தொடரும் பழக்கம் தேவை. எ. உள்ளத்தில் பொருள்களை உணர்ந்தறியும் ஆற்றல் நன்கு வளர வேண்டும். இந்தக் கருத்துரைகளை உண்மையாக்க வேண்டின் வழக்கு மொழியொன்றே வழி.

3. 'இந்தியக் கல்வி முறைக் கொள்கை' எனும் அறிக்கையில் கூறப் பெற்றவாறு 'மாணாக்கர்களுக்கெனக் குறிப்பிடப் பெறும் பாடப்புத்தகங்கள்' எளிதில் பொருள் விளங்கும் மொழியில் எழுதப் பெற்றவையே தேவையன்றி, பழக்கமில்லாத, காவிய மொழிநடையில் எழுதப் பெற்றவையல்ல. பொருள் விளங்கும் மொழியென்றால் மக்களுக்கு அறிமுகமான மொழி வழக்கு

மொழியில் ஒரே உருவமைப்பு பொருந்திய ஒப்புமை நிலையில் இல்லையெனச் சிலர் வாதிடுகின்றனர். இங்கிலாந்தில் கூட கீழ் நிலையிலுள்ள இனத்தவரின் சிறுவர்கள் தத்தமது பிரதேச மொழியிலேயே பேசிக் கொள்கின்றனர். ஆயினும் அவர்களனைவருக்கும் ஒப்புமையான மொழியில் போதிக்கின்றனர். தெலுங்கிலும் கூட அத்தகைய ஒப்புமையான மொழி உள்ளது. அதனில் போதிக்கலாம். உயரினத்தவர்கள் வழக்கத்தால் ஒரே உருவமைப்பிலையெனவும் சிலர் கூறுகின்றனர். 'ஒருவன்' எனும் சொல்லுக்குப் பதினாறு உருவகங்கள் உள்ளன. ஒப்புமையான தெலுங்கு மொழியிலிருக்கும் வேறுபாடுகள் ஒப்புமையான ஆங்கில மொழியிலுங்கூட உள்ளது.

4. தெலுங்கு போதனை எளிய நடை, விருப்பமுறை என இருவகைகளாக இருத்தல் தேவை. விருப்பமுறை மேலும் மேலை நாட்டு இலக்கியத்தைக் கற்றறிய வேண்டுமெனக் கருதுபவர்களுக்கு மட்டும் போதித்தால் போதும். எளிய நடை மாணாக்கர்கள் அனைவருக்குமே போதிக்கப் பெறவேண்டும். எளிய நடை இக்கால மொழியில் இருத்தல் வேண்டும். வரலாறு, மக்களியல் நூல், புவிநூல் முதலியன இந்தத் தொகுப்பில் வருகின்றன. இந்நூல்களைப் புகட்டும் ஆசிரியரே பல்வேறு பொருள்களைப் பற்றித் தெலுங்கில் கட்டுரைகள் எழுதச் செய்கிறார். இவ்வாறு செய்யின் இக்கால மொழிக்கு உரிய இடம் அளித்தவராகின்றோம்.

இந்நூலுக்கு இரண்டு பின் இணைப்புக்கள் கூடப் பந்துலு அவர்கள் எழுதினார். முதல் இணைப்பில் பண்டிதர்களின் செயல்முறையில் செயப்பாட்டுவினைகளாக வாக்கியங்களை அமைக்கிறார்கள் எனச் சான்றுகளைக் குறிப்பிட்டுக் காட்டி, உண்மையில் தெலுங்கில் செயப்பாட்டுப் பயனீடோ இல்லையெனக் கீழ்வரும் எடுத்துக்காட்டினைத் தந்தார்.

| | | | |
|---|---|---|---|
| சமஸ்கிருதம் | : | ச்ரூயதாம்; | பக்நம் |
| தெலுங்கு | : | வினுமு; | விரிகினதி |
| (தமிழில் | : | கேட்க; | உடைந்தது) |

இரண்டாம் பின்னிணைப்பில் ஆந்தர சாகித்திய பரிஷத் மதராஸில் நிகழ்த்திய (1912) பேரரங்கில் இயற்றிய தீர்மானங்களை அறவே குறை கூறினார். மாணாக்கர்களின் வாசக நூல்களில் காதல் சுவையாக முதன்மையான காவியப்

பகுதிகள் எடுத்தியம்பும் பொருளில் பந்துலு அவர்கள் வெளியிட்ட கருத்துக்களை, திட்டவட்டமாக விளக்கியுள்ளார்.

இந்த நூலுக்கு மறுப்பளிப்பாக ஜெயந்திராமய்ய பந்துலு 'இலக்கிய மொழிவாதச் சிறப்புக்கள்' (1913) எனும் நூலினை ஆங்கிலத்தில் எழுதினார். அரசாங்கம் எத்தரப்பிலும் முடிவு செய்ய இயலாமல் அறிக்கை வெளியிடவில்லை. ஆனால் வழக்குமொழிப் பாடநூல்களை மட்டும் அனுமதித்தது. இதனில் இலக்கிய மொழிவாதிகள் (நியாயவாதிகள்) ஊருக்கு ஊர் கூட்டங்களை நடத்தி அரசாங்க ஊழியர்களின் ஆதரவைப் பெறலானார்கள்.

இனி அரசாங்கம் தமது பொறுப்பினைச் சென்னைப் பல்கலைத் துறையினரிடம் அளித்தது. 1913ஏப்ரலில் சென்னைப் பல்கலைக் கழகம் 'கட்டுரைக்குழு' என ஒரு சிறு சங்கத்துக்கு ஏற்பாடு செய்து இப்பொருளைப் பற்றிய இறுதி முடிவினைக் கூறச் செய்தது. 1913 ஆகஸ்டு இரண்டாம் தேதி இச்சங்கம் முதல் கூட்டத்தை நடத்தியது. சங்கத்தில் இருதரப்புப் பிரதிநிதிகள் சரிபாதியாக இருந்தனர். சங்கத் தலைமையைப் பொருத்தவரையில் இலக்கியவாதிகள் 'அரசியலை' நடத்தி உண்மையில் 'சான்றுச் சொற்கள்' என எதையோ குறிப்பிட்டு உரிய 'சான்றுகள்' இல்லாமையால் எந்தத் தீர்மானமும் செல்லாதென வழக்கு மொழிக்குத் தடை செய்தனர்.

அப்போது அப்பாராவ் ஐந்தாறு மாதங்களாக உழைத்து 'மறுப்பு' அறிக்கையை (1914 ஏப்ரல் 20) வெளியிட்டார். பண்டைய மற்றும் புதிய உரை நடையாக்கங்களில் வழக்குமொழியை எவ்வாறு பயன்பெறச் செய்கின்றரென எடுத்துக்காட்டி, மொழி மண்டலச் சான்றுகளுடன் கூடிய எடுத்துக் காட்டுகளை வரையறுத்துக் காட்டினார்.

1914இலேயே ராமமூர்த்தியார் 'உண்மையான மரபு நெறிகள்' எனும் நூலினை வெளியிட்டார். இதுமட்டும் போதாதென 1914-15 ஆம் ஆண்டில் ஓராண்டு காலம் நாடு முழுவதும் சூறைக்காற்றெனச் சுற்றிப் பரம்புரம் தொடங்கி பெள்ளாரி வரையுமுள்ள கல்லூரிகள் பாடசாலைகளுக்குச் சென்று ஆசிரியர்கள் மாணாக்கர்கள் பண்டிதர்கள் கூட்டங்களை அமைத்து வழக்குமொழியேற்கும் பண்டிதர்களுடன் உரையாடி விளக்கங்களை அளித்து அவர்களைத் தமது புரட்சிக்கு உற்றுதவுமாறு உடன்படச் செய்தார். அவ்வப்போதைக்குத் தேவையான சான்றுகளைக்

(பண்டைச் செய்யுள்கள், சாசனச் சொற்றொடர்கள்) கிடைக்கச்செய்ய, சீதாபதியார் புத்தகக் கட்டுக்களுடன் தந்தையாருக்கு உதவி புரிந்து வந்தார். ஒரு வண்டியளவு புத்தகங்களுடன் ஓலைச் சுவட்டு கிரந்தங்களுடன் பந்துலு அவர்களின் மொழியியக்க யாத்திரை அவர் வாழ்வில் ஓர் அத்தியாயமானது. பண்டிதர்கள் ஒப்புக்கொண்டாலும் அத்துடன் விட்டு விடாமல் தமது வாதத்தை அவர்கள் ஒப்புக்கொண்டதற்கான உறுதிச்சான்று ஆதாரங்களைப் பெற்றும், அவர்கள் அவற்றைக் கண்கூடாகக் கண்டதாகவும் அவர்களிடமிருந்து சான்றுகளை வாங்கிவைத்தார்.

பாவம், அப்பாராவுக்கு உடல்நலம் குறையாதிருந்தால் ராமமூர்த்தியாருடன் சுற்றுபவர். அதனால் நண்பருடன் மரணப் படுக்கையிலிருந்த அப்பாராவ் இவ்வாறு சொன்னார்: "ராமமூர்த்தி! நமது மொழிச் சீர்திருத்தத்துக்காக இறுதிவரை போராடு."

கடைசிவரை போராடுமாறு கூறிய நண்பரின் இறுதிக் கோரிக்கையை ராமமூர்த்தி கடைசி மூச்சிருக்கும் வரை செய்து முடித்தார். (காண்க: இறுதி வேண்டுகோள்.)

## மூன்றாம் கால நிலை (1915 – 1940)

அப்பாராவ் மறைவடைந்த சில நாட்களில் ராஜமண்டிரியிலும், பின்னர் சிலமாதங்களில் (1916) கொவ்வுரிலும் ராமமூர்த்தியார் பொதுக்கூட்டங்களில் உரை நிகழ்த்தினார். அச் சொற்பொழிவுகளின் விளைவாக வீரேசலிங்கம் பந்துலுகூட வழக்குமொழி ஆதரவாளரானார். 1919 பிப்ரவரி 28ஆம் தேதி வீரேசலிங்கம் அவர்கள் தலைமையில் வர்த்தமான ஆந்திரபாஷா பிரவர்த்தக சமாஜம் ஏற்பட்டது. ஜெயந்தி கங்கண்ணாவுடன் சேர்ந்து ராமமூர்த்தியார் ஒரு செயலாளரானார். நடைமுறைச் செயல்களுக்கென ஒரு முழுமையான இலக்கணம் எழுதவிருந்த பந்துலு அவர்கள் பின்னர் சில மாதங்கலில் இறந்து போனார்.

'நாம் எழுதலாகாதா! எழுதுவோம்' என்றார் சீதாபதி. 'பந்துலு அவர்களைப் போன்ற பெருங் கவிஞர் எழுதினால் மக்கள் ஆதரிப்பார்கள். நான் எழுதினால் 'கிராமத்து ஆசிரியர் எழுதிய கிராமிய இலக்கணம்' என்பார்களெ'ன ராமமூர்த்தி

விட்டு விட்டார். போராட்டத்தை நிறுத்தலாகாது. அதனால் ஒரு பத்திரிகை தேவையென்று உணர்ந்து கொண்டார் அவர். 'தெலுகு' எனும் மாதப் பத்திரிகையைத் தொடங்கினார்.

தமது பத்திரிகை நோக்கத்தைப் பற்றி, பந்துலு இவ்வாறு எழுதினார்: "நாட்டுப் பற்று என்றால் நமது பார்வையில் மொழியின் மீதுள்ள ஆழ்ந்த பற்றுதான். சிக்கிக் கொண்டிருக்கும் மொழியை வேண்டாமென மறைந்த மொழியை வழிபடுவது எத்தகையதென்றால் பசியோடு மடிந்து இறக்கும் நிலையிலுள்ள மனிதனுக்கு அன்னமிடாமல் செத்தவர்கள் பெயரில் அந்தணர்களுக்கு சிரத்தா உணவு வைப்பது போன்றது."

கிடுகு அவர்களின் மண்டை நிறைய எத்தனை எண்ணங்கள் உள்ளன பாருங்கள்! அவ்வெண்ணங்கள் இப்போதைக்கும் அப்படியே மிகுந்தவையாயுள்ளன. வரவிருக்கும் சஞ்சிகைகளில், 'நாம் எண்ணிப் பார்த்த கருத்துக்கள்' எனத் தமது பத்திரிகைக் கொள்கையைக் கூடத் தெரியச் செய்தார்.

1. தெலுங்கு மொழியில் சாது, அசாது, எளிய மென்மையான கடினமான சொற்களை வகைப்படுத்தல். மென்மையற்றவையெனும் பல ஒலிகள் சாதாரணமானவை எனக் கொள்ளத்தக்க சான்றுகள். 2. நன்னய பாரதத்திலுள்ள சொற்களின் பட்டியல் 3. தெலுங்கு சொற்களின் தோற்றுவாய்கள். 4. சமஸ்கிருதப் பதங்களின் தோற்றம். 5. இறுதி வேற்றுமையுறுபுகளைப் பற்றி, அகர வரிசையாகத் தொகுத்த தெலுங்கு சொற்பட்டியல். 6. நூல்களிலுள்ள பாட விளக்கங்கள். 7. தெலுங்கு வரலாற்றுக்குத் தேவையான துணைக் கருவிகள். 8. இன்றைய தெலுங்கு மொழிக்கு இலட்சணம் அமைப்பதற்குத் தேவையான துணைச் சான்றுகள். 9. நம் முன்னோர்கள் எழுதிய வசன நடைக்கான எடுத்துக் காட்டுக்கள். 10. தெலுங்கு மொழியில் சேர்ந்த பிற நாட்டுச் சொற்கள். 11தெலுங்கு சொற்களின் படைப்பு. 12. தெலுங்கு அகராதிகளிலுள்ள குறைபாடுகள். 13. தெலுங்கு இலக்கணங்களிலுள்ள குறைகள். 14. தெலுங்கு இடைச் சொற்கள். 15. நாடு, இனம், தொழில் முதலானவற்றினாலான வேறுபாட்டில் தெலுங்கு மொழியில் தோன்றிய பேதங்கள். 16. அனைத்து மக்களின் பழக்கத்தில் வந்த பொருள்களைப் புகட்டும் புத்தகங்கள். 17. இன்று தெலுங்கு நூல்களில் பயனாகும் மொழிநடை. 18. இலக்கிய விமரிசனம். 19. மொழியியல் தத்துவம். 20. பிறநாடுகளின் இலக்கியவளம். 21. கல்வி வளர்ச்சி. இவ்வாறு பல்வகைத் தலைப்புக்கள்.

கிடுகு அவர்கள் 1920–38இன் இடைக்காலத்தில் செய்த இலக்கியப் பணியின் அம்சங்கள் அனைத்துடன் தொடர்புள்ளவை அவர் எழுதிய பீடிகைகள், பத்திரிகைகளுக்கு எழுதிய கடிதங்கள், பொதுக் கூட்டங்களில் செய்த சொற்பொழிவுகள். அவை அனைத்தும் கல்வி வளர்ச்சியையும் வழக்கு மொழி நடையையும் மையமாகக் கொண்டவையாகும்.

1933இல் அவரது பிறந்த நாள் விழாவின்போது வெளியிடப்பெற்ற நான்கு இலக்கியங்களின் தொடர்புடன், அவற்றில் சிறப்பாக 'கத்ய சிந்தாமணி' க்குத் தொடர்பான சான்றுகளைச் சேர்ப்பதற்காக அவர் தஞ்சாவூர் செல்லுகை (1919) நாட்டிலுள்ள பிற நூல் நிலையங்களையும், கவிஞர்களையும், விமரிசகர்களையும், பண்டிதர்களையும் கலந்துரையாடுதல், இவையே அவருடைய அன்றாடப் பணியாகி விட்டது. வேட்டுரியாருக்கு எழுதிய கடிதங்களைக் கொண்டு (1924–28) வேட்டூரியாரின் இலக்கிய உதவிகூட மிகவும் கிடைத்ததெனத் தெரிகின்றது.

"வழக்கு மொழியில் இயற்றிய உரைநடை நூல்களை வகை பிரித்து... அவ்வனைத்துக்கும் பெயர்ப் பட்டியல் எழுத வேண்டியுள்ளது. (கடைசிப் பக்கத்தில் எனக்குத் தோன்றிய வகையில் வகைப் படுத்தியுள்ளேன். நீங்கள் ஒப்பு நோக்கலாம்). தெரிந்த அளவுக்கு ஆசிரியர்களின் காலம், அவர்களின் பெயர்களைச் சொல்லவேண்டும். அவற்றில் ஏதாவது பிடிப்பான ஒன்றினை எடுத்தெழுத வேண்டியுள்ளது..." (வேட்டூரியாருக்கு எழுதிய கடிதம், 7.3.1924)

இவ்வாறு எழுதியுள்ளதைக் கவனிக்க வேண்டும். இவ்வாறு எவரிடம் எந்த உதவி தேவையோ அதனைப் பெற்றுக் கொண்டு மேலும் இலக்கிய முறைமைகளின் செய்கைகளைப் பொருத்தமட்டில் தமக்கெதிரியான பிரபாகர சாஸ்திரியாரையும் கூட விட்டுத் தள்ளிவிடவில்லை. அக்கடிதத்திலேயே பாருங்களேன்:

" இந்த நூலையும், உங்கள் உதவியால் தேவையான 'உண்மையான உரையாக்க மரபு நெறியை' மட்டுமின்றி, 'செயலாக்க இலக்கிய ஆந்திர மறுமலர்ச்சி' எனுமொரு நூலினையும் நான் இயற்றுவதற்கு எண்ணங் கொண்டுள்ளேன். செயலாக்க இலக்கிய ஆந்திர எழுத்தாளர்கள் நூறு பேர்களுடைய மொழியை விளக்கி அவர்கள் பிறந்த பிரதேசத்தின் செயல் வடிவ மொழியையும் வெளியிடச்

செய்கிறேன். சின்னய சூரியார் முதல் சிலகமர்த்தி லக்ஷ்மீ நரசிம்மம் வரையும், வேதம் வேங்கட நாராயண சாஸ்திரி, புராணபண்ட மல்லய்ய சாஸ்திரி, நேதி சுப்பராய சாஸ்திரி, மல்லாதி சூர்ய நாராயண சாஸ்திரி, இத்தகைய பெயர் பெற்ற அறிஞர்கள், கொமர் ராஜூ லக்ஷ்மணராவ், வங்கூரி சுப்பாராவ், செலகான லச்சாராவ், ஜெயந்தி ராமய்யா, சிலகலூரி வீரபத்ரராவ் போன்ற விமரிசகர்கள். புதின ஆசிரியர்கள், பாடபுத்தகங்கள் எழுதியவர்கள், பானுகண்டி லக்ஷ்மீ நரசிம்மம் போன்ற நாடக படைப்பாளர்கள் இவர்கள் அனைவரின் நூல்களைப் பார்த்தேன். பிழையான சொற்களின் கீழ் கோடிட்டுள்ளேன். அவையனைத்தையும் எடுத்துக் கட்டுரை வடிவில் வெளியிட வேண்டும். வழக்கு மொழியை இகழ்ந்து அறிமுகமற்ற பண்டைய ஆந்தரமொழியில் இயற்றியவரனைவருக்கும் ஆபத்து தப்பியது. உங்களுக்கும் அப்படித்தான். எனக்கும் அதுதான். உங்களைவிட அதிகமாகத் தொன்மை ஆந்திர மொழியை ஆராய்ந்து தெரிந்துகொண்ட 'பண்டிதர்களை' நான் அறியேன். புகழ்ச்சிக்காகச் சொல்லவில்லை. நம்புங்கள். ஆயினும் உங்கள் எழுத்துக்களில் கூடச்செயல்முறை மொழியமைந்துள்ளது. அவையில்லாமலில்லை. எனவே மற்றவர்களுடன் நீங்களும் பழிக்குரியவர்களே."

ராமமூர்த்தியாரின் ஆராய்ச்சியில் எத்தனை உண்மையான உழைப்புத் திறமையுள்ளதெனக் குறிப்பட்டால் வியப்படைய நேர்கிறது. அவர் தமது உரையை, மொழியைத் தாமே விமர்சித்துக்கொண்ட வாய்ப்பும் உள்ளது.

'எனது மொழி பத்தொன்பதாம் நூற்றாண்டுக்கு உரியதெனவும் அது இன்றையவர்களுக்குப் பொருந்தும் தகுதியுள்ளதன்று எனக் காமேஸ்வரராவ் கூறினார். ஆம். நான் சென்ற நூற்றாண்டில் பிறந்து வளர்ந்தவனாதலால் அப்போதைய மொழி எனக்குப் பழக்கமாகிவிட்டது. அவர்களின் மொழி அவர்களின் பெயரப்பிள்ளைகளுக்குப் பழைய மொழியாகிவிடுகிறது. இதில் விபரீதமேதுமில்லை. தீங்குமில்லை. ஒருவருடைய சொல் ஒருவருக்குத் தெரியாமல் போனாலல்லவா! முடிந்தது!' (காமேஸ்வரராவுக்கு 'நடைமுறை மொழியாக்கத்துக்குச் சில முறைமைகள்' இலக்கியத்துக்கு எழுதிய முகவுரை, 16.12.1938).

அவ்வாறாக ராமமூர்த்தியார் உண்மையைத் தேடிக்கண்டு சொற்போர் புரிந்தாரேயன்றி அவருக்குப் பகைவர் எவருமிலர்.

1922இல் சீதாபதியுடன் சேர்ந்து எழுதிய 'அப்பகாவியம்' முகவுரையிலும், 1925இல் எழுதிய 'மித்யாபவாதம்' எனும் நூலிலும் பந்துலு அவர்கள் நிலைநாட்டியது நடைமுறை மொழியில் எழுதுவதுதான் எல்லா தரத்தினரின் மரபு நெறி என்பதே.

1925-28இன் இடையில் சீதாபதியுடன் சேர்ந்து பந்துலு அவர்கள் நன்னய பாரத நூலேடுகளைத் தேர்ந்தெடுக்கும் பணியைத் தொடங்கினார். மூலப் பாட்டுகளெவை என உறுதி செய்யும் முயற்சி. 1924இல் எழுதிய 'ராஜராஜரின் காலத்திலிருந்த தெலுங்கு மொழி' எனும் கட்டுரையில் அக்காலத்திய சாசனமொழியும் பாரத மொழியும் ஒன்றாகவே இருந்தன என்றார். அந்தக் கருத்துக் கோட்பாடு தேவையெனில் பாரதத்திலுள்ள மூலச் செய்யுள் தெளிவாக்கப் பெற வேண்டும். இப்பணியைச் செய்து கொண்டிருந்தமையால் அவரை உதவி கேட்கவும் தம்மிடமிருந்த தொகுப்புகள்அனைத்தையும் கொடுத்து விட்டார். நாராயணராவுக்கு 1929இல் பிஎச்.டி. கிடைத்தது. அதுவே தெலுங்கு நாட்டில் கிடைத்த முதலாவது பட்டம்.

அரசவல்லி கிராமத்தில் கோதா நரசய்யா எனும் பண்டிதர் இருந்தார். அவருக்குக் கணக்கிலடங்காத காவியங்கள் மனப்பாடம். வண்டி கொள்ளுமளவு செய்யுள் கட்டுகளை ராமமூர்த்திக்கு அவர் கொடுத்தார். இவ்வனைத்தின் உதவியுடன் அவர் அரிய அகராதிப் படைப்புக்கு முயற்சி செய்யலானார்.

ஆயினும் அவருக்கிருந்த இனிய பண்பு மிக உயர்ந்தது. 1934இல் சர்வபல்லி ராதாகிருஷ்ணனின் தலைமையில் சவரமொழி அகராதியை விக்ரமதேவ வர்மா அவர்களுக்குப் பந்துலு சமர்ப்பணம் செய்தார். அந்தக் கூட்டத்தில் பந்துலு அவர்கள், "சவரமொழியமைப்பில் தெரிந்த அளவுக்கு விரிவாகவும் விளக்கமாகவும் தெலுங்கு மொழியமைப்புக் கூறுகள் எனக்குத் தெரியாதெனவே சொல்லவேண்டும்," எனக்கூறினார் என்றால் அவர் தமது சொற் போராட்டத்தை எந்த நோக்கத்தில் செய்து வந்தாரெனப் பொருள் கொள்ளலாம்.

1933இல் பந்துலு அவர்கள் பிறந்தநாள் விழா நிகழ்ந்து கொண்டிருக்கையில் ஒரு புத்தகக் காட்சி நடந்தது. கிடுகு அவர்கள் சிலமணி நேரம் அந்தக் கண்காட்சியிலிருந்து ஒவ்வொரு புத்தகமாக விரிவாக ஆராயலானார். அவற்றில் ஏதோ ஓர் இலக்கியப் புத்தகம் உள்ளது. அந்தப் புத்தகத்தை எடுத்து

'இது ஏன் இங்கே வந்தது?' என்றாராம் அவர். தமது கொள்கையில் அவருக்கு அவ்வளவு உறுதிப்பாடு.

முன்னர் குறிப்பிட்ட தேகுமள்ள காமேஸ்வரராவின் புத்தகத்திற்கென முன்னுரை எழுதுமாறு பந்துலு அவர்களை அவர் வேண்டினார். 'நடைமொழிக்கு வரையறை இல்லை' எனவும், 'உறுதியான மொழி என ஏதுமில்லை' எனவும் எழுதுவதாகக் கூறினாராம் அவர்.

எனவே கிடுகு அவர்கள் விரும்பியது வெற்று சந்தி, சாரியை முறைகளைச் சார்ந்த இலக்கிய நடைமுறையன்று. அவருடைய பார்வையில் 'உறுதிப்பாடான உருவகம்' காலப் போக்கில் ஏற்படுவதேயன்றி, ஒருவரின் முயற்சிப் படைப்பினால் உருவாக்கம் பெறுவதாகாது. மொழியியல் நூல் கோட்பாடுகள் இந்நாளில் வளர்ச்சியடைந்ததைப் போன்று அந்நாட்களிலேயே மொழியில் 'உறுதிப்பாடமைவு' மீது பந்துலு அவர்கள் எழுதிய கருத்துக்கள் வியப்புக்குரியனவாயுள்ளன.

1935–38 ஆண்டுகளுக்கிடையில் பந்துலு அவர்களின் தொகுப்பான 'சூரியராய ஆந்திர அகராதி'யின் மீது, தொடக்கத்தில் ராமமூர்த்தியை ஒரு துணையாசிரியராக இருக்க விரும்பினார். "ஐயா! நமது கொள்கைகள் வேறு. நான் ஆம் என்பதை நீங்கள் இல்லையென்கிறீர்கள்....." என அந்தப் பணியிலிருந்து தப்பித்துக் கொண்டு, "உங்கள் இலக்கியப் படைப்புக்கென நான் வந்து அதில் சேர்க்க வேண்டியவை, நீக்க வேண்டியவை எனத் தெள்ளத் தெளிவாகத் தெரிவிக்கிறேன். என் கருத்துக்களை நீங்கள் ஒப்புக் கொள்ளும் பொழுது ஒவ்வோர் அம்சத்துக்கும் ஒவ்வொரு ரூபாய் அன்பளிப்பாகக் கருணை காட்டவேண்டும்" எனக் கூறினார் என்றால் அகராதிப் படைப்பில் அவருக்கு எத்தகைய உண்மையான ஆர்வம் இருந்ததெனக் காணுங்கள்.

இப்போதைக்காகிலும் நாம் அந்த அகராதியை, பரந்ததோர் அகராதியை உருவாக்கிக் கொள்ள வேண்டியுள்ளது. 'சப்தரத்தனாகர'த்தின் மீது 'சூரியராயாந்திரம்' வெறும் ஒரு மேம்பாடேயன்றி தொகுப்பன்று, என்றவர்களின் கருத்தை நாம் மறக்கலாகாது.

அவர் 'தெலுகு' பத்திரிகையில் எழுதிய ஆங்கிலக் கட்டுரைகள் மிகவும் சிறப்பானவை. வியாசாவளி நூலில் (1933) அவை தொகுத்திணைக்கப் பெற்றன. உயிர்ப்பு மொழியைப் பயன் பெறச் செய்வதில் தன்னுரிமை வேண்டுமெனவும்

உயிர்ப்புமொழியை எவரும் அமைத்துத் தரவில்லை எனவும் வழக்கு வொழியையும் எழுது மொழியையும் ஒன்றிணைக்கச் செய்ய வேண்டுமெனவும் 'மக்களிலக்கியம்' (1,2,3) எனும் மூன்று கட்டுரைகளை எழுதினார். அக்கட்டுரைகளின் கருத்துச் சுருக்கமிது:

இக்காலத்திலேயே இலக்கியம் முன்னிலை பெற்றுள்ளது. பொருளில் மட்டுமின்றி உருவகத்திலும் கூட இக்காலத் தன்மையை அது ஒருங்கேற்றுள்ளது. மனிதனின் செயல்முறை நடவடிக்கைகளுக்கும் பண்பாட்டு நிகழ்வுகளுக்கும் வரலாறு இருப்பது போலவே மனிதனின் மொழிக்கும் கூட பிறப்பு வளர்ச்சி வரலாறு உள்ளது. இந்த மாற்றம் எப்பொழுதும் முதலில் தோன்றுவதனாலன்றி மொழியில் மறைந்து போவதோ வலிமை இழப்பதோ இல்லை.

அதனால்'மக்களிலக்கியம்' எனில் என்ன எனப் பொருளறியும் காலநிலையில் நம்மவர்களில்லை. 'தெலுங்கு பாரதம் கோயில்களிலும், கடைத் தெருக்களிலும் படிக்கின்றனரன்றோ! என மறுதளித்தீர்கள். எவரோ ஒரு பண்டிதர் படித்தால் அதனை மற்றொருவர் வழக்கு மொழியில் விளக்கம் கூறிக் கொண்டிருக்க, பொது மக்கள் பொருளுணர்ந்து கொள்கின்றனர். இதுவன்று மக்களிலக்கியம் என்பது, பொப்பிலி கதை பாட்டுப் பாடினால் எத்தனை பேர் கூட்டம் கூடுகின்றனரெனப் பார்த்தீரா! பாடுபவனுக்குப் படிப்பு வராது. கேட்பவரெல்லாரும் கற்றறிவரற்றவரே. அங்கு ஒரு மூலையிலமர்ந்து ஒரு பண்டிதர்கூட இந்தக் கிராமிய நிகழ்ச்சியைக் கண்டு மகிழ்ந்திருக்கலாம். அதுதான் மக்களிலக்கியம்,' என்றார். பந்துலு அவர்கள். 'மக்களறிவியல்' ஆராய்ச்சி மூலநூலில் இதனை விளக்கியிருந்தார்.

கீழை மற்றும் மேலை நாடுகளில் கொள்கை நூல்களை நாட்டு மொழிகளில் மொழியாக்கம் தவறெனக் கருதப் பெற்றதெனக் கூறி டெண்டல் (1526) செய்தியை அறிவித்தார். லண்டன் பிஷப், பைபிளை ஆங்கில மொழியில் எழுதினார் என்பதற்காக டெண்டலைத் தீயிட்டனராயினும் பிற்காலத்தில் அந்த மொழியாக்கமே ஆங்கிலேயருக்குத் தலைசிறந்த மாபெரும் இலக்கியமாகிவிட்ட நிகழ்ச்சியை அறிவித்து, பொதுமக்களின் மொழிநடையில் எழுதுவதே அவர் செய்த அருஞ்செயலென்றார்.

ராமமூர்த்தியாரின் இலக்கியத்தின் எதிர்காலக் காட்சி மிகவும் அருமையானது. சமகாலத்தவரான தெலுங்குக்

கவிஞர்களெல்லாம் மிக உயர்ந்த இனத்தவர்களானமையால் மேலை நாடுகளில் 'புத்திலக்கியம்' பிறந்த பொழுதே சமுதாயத்தின் கீழ் நிலையிலிருந்த மக்களிடையிருந்து கவிஞர்கள் பிறக்கலானார்களென்ற செய்தியை அவர் மிகப்பல இடங்களில் நினைவு கூர்ந்தார். பன்யான் பாத்திரப் பூச்சுப் பணி செய்தவர்; ஃபாக்ஸ் செருப்புத் தைக்கும் பணியாளர்; ஜான்ஸடன் கடினமான தையல்பணி புரிந்தவர்.

எளிய பொதுமக்களிடையில் ஒவ்வொரு நிறுவனமும் மக்களின் உயர்வானதாகின்றது. மதங்கள், இன இயல்புகள் தொடர்கின்றன. மக்களரசாங்கம், மக்கள் கல்வி இரண்டும் ஒன்றோடொன்று பிணைந்துள்ளவை. மக்கள் கல்வி பொதுமக்களிலக்கியத்தின் மீதும், மக்களின் தத்துவ நோக்குகளின் மீதும் அறிவியலின் கண்ணும், மொழியின் மீதும் எனச் சார்புற்றவையாகிப் பொதுமக்களுக்குக் கிட்டும் வகையில் வரும் ஓர் இடைப்பாடாகி வருகிறது,' எனக்கூட அவர்கூறினார்.

பாரத மக்கள் இந்த வியத்தகு சூழ்நிலையில் ஏன் உள்ளனரெனச் சொல்ல, "பாரத நாட்டில் தமக்குத் தெரிந்த மொழிகளில் அறிவு பெறவேண்டுமெனும் முதன்மையான உரிமை ஒன்று உளதென்று கூடப் பெரும்பாலானவர்க்குத் தெரியாது. இதன் விளைவாகப் பிராந்திய மொழி ஏதுவும் முழுமையாக விளங்கவில்லை," என்றார். அவ்வாறு பிராந்திய மொழிகளில் தமது மதப் பிராசாரம் செய்த கௌதம புத்தர் பாலி, பிராக்ருதத்திலும், தியான தேவர், நாமதேவர், துக்காராம் முதலான மகாராஷ்டிரத்தின் பக்திப் பெரியார்கள் நமக்கு வழிகாட்டிகளுமாவார்கள் என்றார்.

நீதிபதி ரானடேயவர்களின் கருத்துக்களை விளக்கிக்காட்டி 'அவருக்கு சமஸ்கிருதந் தெரியாது. ஆனால் அவரிடம் கவிதைத் திறமை உள்ளது,' என்று துளசிதாஸ் ராமாயணத்தினையும் ரவீந்திரநாத் தாகூர் உரையாக்கங்களையும் உயிர்ப்பு மொழி நூல்களென எடுத்தியம்பினார்.

மராட்டி,ஹிந்தி, வங்கமொழிச் சகோரதரர்களைப் போலவே தெலுங்கர்களும் கூட 'சவீத் பாஷா' (வழக்கு மொழி)யை இலக்கிய மொழி நடையாகப் பயனாக்க வேண்டுமென்றார்.

கிடுகு அவர்கள் தமது 'பாலகவி சரண்யம்' முதலான நான்கு நூல்களில் நடைமுறை மொழி வாதத்தை நிலை நிறுத்த முயன்றார்.

1. பண்டிதர்கள் வைத்தியர்களல்லர் ஆகலாகாது. எல்லாருக்குமே இலக்கியமொழி இயலாது. ('ஆந்திரபண்டித பிஷக்குல பாஷா பேஷஜம்').

2. பண்டை உரை நடை நூல்களில் நடைமுறை மொழியமைப்பே உள்ளது. (கத்ய சிந்தாமணி).

3. கவிஞர்களின் பயனாக்கமே இலக்கணத்தைக் காட்டிலும் நிலை நிறுத்தச் சான்றுகள். (பாலகவிசரண்யம்).

4. ஆந்திர இலக்கியமும் உலகக் கலை இலக்கியப் படைப்புக்களைப் போன்றே மாறியது.(வியாசாவளி).

'பாலகவிசரண்யம்' நூலில் பந்துலு அவர்கள் 192 வரிகளில் முகவுரைக் கவிதை எழுதினார். ராமமூர்த்தியாரின் கவிதைத் திறமை எத்தகையதென இந்தச் செய்யுளில் காணுங்கள்:

எந்தத் தாயின் மகவாயிருப்பினும்
விரும்பியேற்றெம் மொழியும் கற்போமுலகில்
என்னம்மையைத் துதித்து வேண்டி
மாயைநீக்கி மொழி மர்ம மறிவோம்.

ரிக்வேத மத்திரத்தை முதலில் பந்துலு அவர்கள் எடுத்துக் காட்டினார்.

யஸ்தேஸ்தவ: சசயோ யோமயோ
பூர்யேன விஸ்வா புஷ்ய சிவார்யாணி
யோரத்னதா வசுவித்ய: சதத்ர:
சரஸ்வதி தமிஹாத நேக:

சரஸ்வதி எது கோரினாலும் அளிப்பாளென்பது உட்கருத்து. பந்துலு அவர்கள் 'மொழி மர்மத்தைத் தெரிவிக்குமாறு சரஸ்வதியைப் பிரார்த்திக்கிறார். கலைத் தெய்வத்தைத் தொழுது வேண்டுகிறார்.'

'சபிக' ஒலிச் சொல்லைப்பற்றி ராமமூர்த்தியார் செய்த விளக்கவுரை (காண்க: பேஷாபேஷஜம், பக்கம்: 131–134) அவருக்கு வாக்தேவியின் அருள் முழு நிறைவாக உண்டாகியிருந்ததென எடுத்துக் காட்டுகிறது. காட்சியுறு செயல்கள் வேறு, காட்சி பெறுவோர் வேறாவரெனக்கூறி அவர்கள் காட்டிய உவமைக்காட்சிகள் அளவிறந்துள்ளன.

'சிஷ்ட' எனும் சொல்லை எடுத்தாள்கையில் 'மஹாபாஷ்யத்தை மனக்காட்சியிலிருந்தியவாறு அவர் எழுதி ''பால கவி சரண்ய' தொடக்கச் செய்யுள்கள் அவருடைய நூல்களின் விமரிசனத்துக்குத் தகுதியாயின.

மாணாக்கர்கள் என்றால் இலக்கணம் பயிலாமல் நல்ல மொழியில் பேசுபவர்களென்ற மஹாபாஷ்யக் கருத்தினைப் பந்துலு அவர்கள் உணர்த்தறிவிக்கும் 'இறுதி வேண்டுகோள்' நூலில் இவ்வாறு உரைத்தார்:

"நமது பண்டைய இலக்கிய மொழி வேதமொழியைப் போன்றது. உலக வழக்கு மொழிக்கு அமைப்பு இலக்கணம் உரைத்த பாணினி, காத்யாயன், பதஞ்சலி ஆகியோர் உலகிலுள்ள வழக்கு மொழியை அடித்தளமாக உணர்ந்தேற்று சூத்திரங்களையும் வாக்கியங்களையும் இயற்றிய கிரந்தங்களிலான மொழியை அடிப்படையாகக் காட்டினாரிலர்."

இக்கருத்தினை விவரித்த கிடுகுவினை நன்கு பொருளறிந்தவர் எவருமிலர்.

"மொழியியல் கோட்பாட்டு நெறி, மொழி வரலாற்று விளக்கம் நம் ஆந்திரப் பண்டிதர்களிடம் அறவே இல்லை... எனவே நமது தெலுங்கு மொழிக்கு, தெலுங்கு நூல்களுக்கு இத்தகைய பெருங்குறை நேர்ந்துள்ளது. போதனையாளர்கள், வழிகாட்டிகள், அறிஞர்கள் தத்துவமறியாதவராக இருக்க நேரின் உலகுக்கு அளவு மீறிய தீங்கு உண்டாகுமென நாம் நினைவிலிருத்திக் கொள்ள வேண்டும். மொழியியல் கோட்பாடுகளை அறியாதவர்கள் மொழியறிஞர்களாக மாட்டார்கள். அத்தகையோர் நாமும் ஏமாற்றமடைந்து பிறரையும் ஏமாற்றமடையச் செய்து உலகுக்கு மிகவும் கேடு புரிகின்றனர். அவர்கள் தூய அறிவினைக் கைவரப் பெறாமையன்று, அறியாமைதான்."

இவ்வாறு பந்துலுவின் 'பாஷா பேஷஜத்தை' (மோசடியை, அறிவு நிலையை) பந்துலு அவர்கள் வாழ்க்கை இறுதிவரை இடித்துரைத்தவாறிருந்தார்.

# அத்தியாயம் நான்கு

## மேன்மை மிக்கவர்

"நமக்குத் தேவையானது 'சாந்தி'. எனக்கிது கிட்டியதில்லை. வெறும் பேச்செதற்கு? ஐயங்கள் மிகுதியாயின. தத்துவ நெறிக்கெனக் கானல்காட்சியின் பின் சென்றேன். வழியோ போக்கோ காணவில்லை. பயணத்துக்குத் தகுதியாக்கிக் கொள்கிறேன். புறப்பட்டுச் செல்லாமலிருப்பது தவிர்க்க வியலாது." (வேட்டூரி பிரபாக சாஸ்திரியாருக்கு எழுதிய கடிதம். 11-1-1928)

ஒருபுறம் இலக்கியவாதிகளுடன் தொடர்புற்றமை, மற்றொரு புறம் சவரமொழியின் மீது செய்யக் கருதிய பணி முடிவுறவில்லை. உள்ளம் ஓய்வுற்ற நிலையில் இல்லை. அந்தக் காலத்தில் எழுதிய வாக்கியங்களிவை. சவர நூல்களின் வெளியீட்டுடன் ஒரு கோரிக்கை தீர்ந்தது. 'புத்திலக்கியப் பேரவை' (1936) அமையப் பெற்று, தமது கட்டுரைகளைச் செயல் வடிவிலாற்றியதும் இரண்டாம் கோரிக்கையும் தீர்ந்தது.

ஆனால் அவர் 'சாந்தி' இல்லாமற் போனாரென்ற நிகழ்ச்சி அவருடைய உள்ளார்ந்த மனவெழுச்சியுடன் தொடர்புற்றதாகும். அவர் வாழ்க்கையின் நிகழ்வுகளனைத்தையும் ஆய்ந்தறிந்தால் அவர் உள்ளத்திலான 'மனிதன்' காணப் பெறுகின்றான். சில நடந்த நிகழ்ச்சிகளை முன்னரே விளக்கியுள்ளேன்.

பர்லாகிமிடியில் அவருக்கு நண்பர்களெவருமிலர். ஒருவர் மட்டுமிருந்தாராம். சீமனபல்லி ரமணய்யா எனும் பாடசாலை ஆசிரியர். இவ்விருவரின் இயல்புகள் ஒருமித்தனவாயிருந்தன. சமுதாயத்துடன் கூடியவாறு தமது வாழ்க்கையை மாற்றிக் கொள்ளமட்டும் அவர்கள் முயன்றவர்களல்லர். "தமக்கு விருப்பமற்ற சூழ்நிலையிலிருந்து விலகிக் கொள்பவர்கள். ஆனால் இதற்கும் தங்களுக்கு விருப்பமில்லாத நபர்கள் மீதும் நடவடிக்கைகள் மீதும் ஒரு வெறுப்புணர்வு கூடு

கட்டிக்கொண்டு வந்தது. சிறப்பாகப் பிற மனிதர்களின் நெறிமுறைக் கட்டுப்பாடுகளில் இத்தன்மை மேலும் தெளிவுற வெளிப்பட்டது. ஒவ்வொரு முறையிலும் இவ்விருவரின் சொற்பொழிவுகள் எவ்வளவு கடுமையாக இருக்குமெனில் அவற்றைக் கேட்ட பிறர் யாவரும் தாங்கவியலாத அளவு. அவ்வாறாயினும் அவ்விருவரிதயத்தினூடே மனிதர்கள் மீதான அன்புப்பிணைப்பு மட்டும் நிறைந்திருந்தது. அவர்களின் முன்னேற்ற மேம்பாட்டினை மட்டுமே அவ்விருவரும் விரும்பினர்."

இந்தக் கருத்துக்களைக் கூறியவர் பந்துலு அவர்களின் உடனான அம்மான் மகன் காள்ளகூரி சூரிய நாராயணராவ் அவர்கள் (1965). (அத்தியாயம் : 6)

## சீடர்களும் அபராதங்களும்

ராமமூர்த்தியாரின் வரலாறு அனைத்தும் ஓர் ஆர்வமிக்க ஆசிரியரின் கதையே. அவருக்குத் தனிமனித வாழ்க்கையென ஏதுமில்லை. அதனாலேயே அவர் உறவினரே பகைவர், மாணாக்கர்களே ஆசான்கள்.

1905 ஆம் ஆண்டில் எஃப். ஏ. படிப்பிற்காக தாபீ தர்மாராவ் பர்லாகிமிடியிலுள்ள கல்லூரியில் சேர்ந்தார். தொடக்க நாட்களில் வகுப்பறைக்குள் வரும்போதே பந்துலு அவர்கள் தர்மாராவைப் பார்த்து 'முகத்தில் பொட்டில்லையே ஏன்?' எனச் சீறி விழுந்தார்.

தர்மாராவ் எழுந்து நின்று, 'நான் அந்தணன் அல்லனென்'றான்.

'என்னவாயிருந்தாலும் பொட்டு வைக்க வேண்டாமா?' என மீளவும் குரு அவர்கள் முழங்கினார். அவ்வாறு கூறி, பொட்டுவைத்துக் கொண்டுதான் வரவேண்டுமெனச் சொல்லவுமில்லை. ஆறு மாதங்கள் வரை வகுப்பறையில் புறமுதுகு காட்டிப் பிள்ளைகள் எவரையும் பார்க்காமலே பாடங்கள் நடத்தினார்.

இவ்வாறு தொடங்கியது அவரின் குரு சீடர்கள் உறவு.

ஒருநாள் உலகப் படத்தில் 'ஸ்பார்ட்டா' வைக் காட்டுமாறு

சொன்னார். தர்மாராவ் காட்டினான். அவ்வளவுதான், அன்பு மாணாக்கனாகிவிட்டான்.

மற்றொரு நாள் அதே தர்மாராவ் ஒரு பதில் கூறவியலாமல் போனான். தமது காதிலிருந்த ஒலி பெருக்கிக் கருவியை எடுத்துக் கீழே எறிந்துவிட்டு 'இனி உங்கள் வகுப்புக்கு வரமாட்டேன்' என வெளியேறிவிட்டார்.

இவ்வாறிருந்தன அவருடைய அன்பும் பற்றும்.

1908ஆம் ஆண்டுவாக்கில் எஃப்.ஏ. படித்துக் கொண்டிருந்த சிலுகூரி நாராயணராவ் சுறுசுறுப்பான பையன்தான். இலக்கியப் பித்துப் பிடித்துத் தேர்வுச் சோதனையில் ரோமானிய வரலாற்றுத் தாளினைப் பாழாக்கிக் கொண்டான். மிகவும் நன்றாக எழுதுவானெனக் கருதிய இம்மாணாக்கன் இவ்வாறு செய்யவும் பந்துலு அவர்கள் உடனே முதல்வரான மங்கு ஸ்ரீநிவாசராவ் அவர்களில்லத்துக்குச் சென்று, " ஏய் ஸ்ரீநிவாசராவ்! நீ யாரைத் தேர்வுக்குத் தேர்ந்தனுப்பினும் சரி, நாராயணராவை மட்டும் அனுப்பினால் என் வேலையை விட்டுவிடுவேன்," என்றார்.

பந்துலு அவர்களுக்குப் பரிந்துரை கூறுதல் நடக்காத செயலென அனைவருக்கும் தெரியும். அன்னபூர்ணம்மாவுக்கு இந்த நிகழ்ச்சியைச் சொல்லி நாராயணராவ் குமுறி அழுதார். அவர் மனமிரங்கிப் போய், கணவரிடம் உணவருந்தும் போது இனிய பேச்சுக்களுக்கிடையில் நல்ல சுவையான தயிர் சாதம் உண்ணும் பொழுது, 'நம் நாராயணராவ்!' எனக் காதில் உரத்த குரலில் சொன்னார். அவ்வளவுதான் மகிழ்ச்சியெல்லாம் மறைந்துபோய், கணத்தில் முகம் தணலெனச் சிவந்தது. அவ் எச்சில் கையுடனேயே முதல்வரின் இல்லம் சென்று, 'என் மனைவிகூட நாராயணராவுக்குப் பரிந்து பேசுகிறாள். நீ மட்டும் அவனைத் தேர்வுக்கு அனுப்பினால் எனக்கும் உன் கல்லூரிக்கும் விடைதான்,' என மிரட்டிவிட்டு வந்தார்.

கலங்கிப்போன நாராயணராவ் ஏறத்தாழ இரண்டு வாரங்கள் எங்கேயோ ஓடிப்போனான். மீண்டும் அவ் இளைஞன் திரும்பி வரும் வரையில் பந்துலு அவர்கள் கொண்ட இரக்கம் அளவற்றது.

சீடனுக்கு இவ்வாறாக நீதி போதனை செய்தார்:

"ஆம்! வந்துவிட்டாய்! அப்பா! படிப்பு சும்மா வருகிறதாப்பா! பன்னிரண்டாண்டுகளாக இந்தப் பணி செய்கிறேன். இப்போதைக்கு இன்னும் எதுவும் முடிந்ததாகவில்லை. உழைத்தாலன்றி செயற்படாதப்பா! போ! உழைத்துப்படி. தேர்வுக்குப் படி!" என்று தோள்மீது தட்டியவாறு கண்ணீர்த் துளியும் சிந்தினார்.

மறைவு தெரிவறியாத மனிதர்.

ராமமூர்த்தியாருக்கு வஞ்சப்பேச்சுகள் ஏதும் தெரியாது. விமர்சனைகளில் எவ்வாறோ உண்மை வாழ்க்கையிலும் கூடப் பொய் கூறல் அவருக்குத் தெரியாது.

ஒரு முறை அன்னபூர்ணம்மா ஆசிரியர் ஒருவர் தம் மனைவியை அடித்துத் துன்புறுத்துகிறார் என்று கேள்விப் பட்டதாகச் சொன்னார். அவ்வாசிரியர் ஒருநாள் வழியில் காணப் பெற்றார்.

"என்னய்யா, நீ உன் மனைவியை அடிக்கிறாயாமே."

"உங்களுக்கு யார் சொன்னார்கள்!"

'யாரோ என்ன? என் மனைவிதான் சொன்னாள்."

அதன் பிறகு மனைவியார் கேட்டார். "என்னங்க! நமக்குள் நாம் சொல்லிக் கொண்டால் அவற்றையெல்லாம் அவரிடம் சொல்கிறீர்களே எதற்கு?" என அதற்குப் பந்துலு கூறினார்.

"பிறரிடம் சொல்லக் கூடாததென ஏதாவதிருந்தால் என்னோடு சொல்லாதே," என்று.

விஜய நகரம் அரசரின் சமஸ்தானத்தில் 'போகம் மேளா' எனும் இன்ப விழா நடந்து கொண்டுள்ளது. நண்பரை வரச் சொன்னார் அப்பாராவ். மனம் வாக்கு செயல் என மூவுறுப்புக்களின் தூய்மையுள்ள வெளிப்படையான ராமமூர்த்திக்கு விருப்பமில்லையாயினும் தொழிலின் கடமையெனச்சென்றார். அரசருடன் அவருடைய தாசி குலப்பெண் ஒரே இருக்கையில் காட்சியளித்தாள். அவ்வளவுதான்! சபையின் மரியாதைகளைக் கூடக் கருதிப் பார்க்காமல் கூட்டத்திலிருந்து வெளியில் வந்துவிட்டார். அப்பாராவும் ஏதோ அருவறுப்புடன் வெளிநடந்தார்.

"ராமமூர்த்தி! நமக்கு விருப்பமிருந்தாலும் இல்லாவிட்டாலும் ஜமீந்தாரிடம் வேலை செய்யும் காலம் முழுவதும் ஏதாவது சில ஒழுங்கு முறைகளைப் பின்பற்றாமல் முடியாதய்யா! உன்னைப் போல முறைப்பும் விறைப்புமாகப் போனோமானால் சில இடையூறுகளில் விழநேரும்."

ராமூர்த்தி உடனே இவ்வாறு சொன்னார்:

"இதோ பிறருடைய மகிழ்ச்சிக்காக என் நெறிகளை நான் சாகடிக்கமாட்டேன். என் மனதுக்குப் பிடிக்காத கொள்கைக்கு, பிடிக்காத வேலையை நான் செய்யமாட்டேன். நான் மனச்சாட்சிக்கு மாறாக மாட்டேன்."

இத்தகையவராக இராமற்போனால் பிறர் கூறிய பழிகளைக் கேட்ட அரசியார், 'உங்கள் முறையை மாற்றிக் கொள்ளுங்கள். பழைய முறைகளில் பாடங்களை நடத்துங்கள். இல்லையென்றால் இந்த மாதக்கடைசி வரை வேலை செய்து பணியை விட்டுவிடலாம்,' என்று செய்தியனுப்பவும், 'மாதக்கடைசிவரை எதற்கு? இப்போதே விட்டு விடுகிறேன்' என அப்பொழுதே கோட்டைக்குச் செல்வதை விட்டு விடுவாரா பந்துலு அவர்கள்.

## செயலார்வ இதயத்தவர்

ராமமூர்த்தியார் செயலார்வமிக்கவரென முதுகில் பலகை கட்டிப் புகழ் பெறத் திரியவில்லை. ஆனால் அவர் வாழ்க்கையில் சவரர்களுடன் அவர் அடைந்த உளநிறைவும், 1908இல் தமது சீடரான கன்னேபல்லி நரசிம்மம் இங்கிலாந்திலிருந்து திரும்பி வந்திருந்தபோது விருந்தளிக்கையில் அந்தணர்கள் வெளிநாடு சென்றால் கங்கைநீர் அருந்தாமல் போன நிகழ்ச்சியும் அவருள்ளத்தில் ஒருவகைச் சமநிலையைக் காணப் பெறச் செய்தன.

உண்மையில் பந்துலு அவர்களின் வாழ்க்கை முழுவதும் பண்டிதர்கள், அதிகாரிகள் தொடர்புடன் கழிந்தது. பர்லாகிமிடி ஜமீன்தார்கள் எவ்வளவு தொலைவு சென்றார்கள் என்றால், கடைசியில் நாவிதன் கூட இவர் வீட்டுக்குச் செல்லலாகாதெனக் கட்டுப்படுத்தினார்கள். அந்த நாவிதனுக்கென்னவோ பந்துலு

என்றால் அத்தனை மதிப்பு. வேண்டாம் என்றாலும் நிற்காமல் வந்து கொண்டிருந்தான். நாவிதனைக் காப்பாற்றுமளவுக்குத் தமக்குத் தகுதியில்லை. எனவே ஆறுமாதங்க்ளாகத் தாடியை வளர்த்து விட்டாராம் பந்துலு அவர்கள். அவ்வாறு ஒவ்வொரு செயலிலும் ராமமூர்த்தியாரின் முத்திரை ஒன்றிருந்தது.

## இனியவர்—தன்னுணர்வுடையவர்

ஜெயந்தி ராமய்யா அவர்கள் பந்துலுவைச் சமணனைப் போன்றவர் என்றார். அவர் காலத்தவர் அவரை 'அழிவாக்குபவர்' என்றனர்.

பாரதி இதழில் நாட்டுப்பாடலொன்று வெளிவந்தது, 'மறுபிறப்பில் எவருடனோ' என்று, படித்துக் கொண்டிருக்கும் போது ஏட்டின் ஓரத்தில் 'எஜம்' என எழுதிக்கொண்டு, உடனே நண்டூரி சுப்பாராவுக்கு வாழ்த்துச் செய்தி அனுப்பினார்அவர்.

சின்னயசூரி நாட்டுக்கு அளித்ததென்னவென்பதை இவ்வாறு உரைக்கிறார்:

"அதிகாரம், அதிகாரமற்ற மாறுபாடுகளை எண்ணிப் பார்க்காமல் அப்படியும் இப்படியுமாக எல்லாச் சிறுவர்களிடமும் இலக்கியப் பயிற்சியளிக்க எண்ணங் கொண்டு, அதற்கான துணைக் கருவிகளாக வேறுபட்டதும் முடிவற்றதுமான, மிரட்டலும் அச்சுறுத்தல் ஆபத்துக்கள் மிக்க அவர் சிறிய இலக்கண நூல் ஒன்றினையும், சான்று விளக்கமற்ற சிறிய உரைநடை நூல் ஒன்றினையும் இயற்றித் தந்து ஆசூரியார் புகழ் படைத்தவரானார். 'மலைநாட்டுச் சீமையிலுள்ள ஊற்றுக் களிலிருந்து நீர் எடுத்து வந்து சமையல் செய்து சாப்பிடுங்கள்,' என மார்பளவுத் தாம்புக் கயறு, களிம்பேறிய சிறிய செப்புக் குடத்துடன் சின்னஞ் சிறுவர்களின் கரங்களில் வைத்துத் தாய் தந்தையர் ஸ்ரீசைல யாத்திரைக்குச் சென்றது போலாயிற்று."

இவ்வெடுத்துக் காட்டில் உண்மை எவ்வளவோ அவ்வளவு கவிச்சுவையுமுள்ளது.

ராமமூர்த்தியாருக்குத் தகுந்த இல்லத்தம்மையார் அன்னபூர்ணம்மா. 1911இல் பர்லாகிமிடியில் அடைமழை கொட்டியது. பந்துலு என்னவோ மாடியில் படிப்பதில்

மூழ்கியிருந்தார். நாற்பது பேர் வீடிழந்து வந்து கதவைத் தட்டினார்கள். அவ்விரவெல்லாம் அவர்களுக்குச் சமைத்து வடித்து, அன்னபூர்ணம்மா உணவளித்த சேவை அவ்வளவு இவ்வளவு இல்லை.

பங்குபல்லி மல்லய்ய சாஸ்திரியாரின் மகளின் கணவன் சிறுவயதிலேயே இறந்து போய்விட்டான். கிடுகு தம்பதியினர் இருவரும் மணைகள் மீதமர்ந்து வேதியர் சத்ய நாராயணருக்கு அவ்வம்மையை மணம் செய்வித்தார்கள்.

அறுபதாண்டுகள் சேர்ந்து வாழ்ந்த கணவர் விட்டுப் போகிறாரெனத் தெரிந்த அன்னபூர்ணம்மா அழுதவாறே ஒரு மூலையிலிருந்தார். ராமமூர்த்தியார் அவரை அருகிலழைத்து:

"பெண்ணே! உன்னைவிட நான் முன்னே பிறந்தவனில்லையா! பின் அப்படித்தானே உனக்கு முன்னால் நான் போக வேண்டும். இது வழக்கம்தானே."

என்றிவ்வாறு அவரைத் தேற்றினாராம்.

அதனாலேயே ராமமூர்த்தியாரைத் 'தபஸ்வி' என எல்லாரும் போற்றினார்கள். இல்லையெனில் தாம் பத்தாண்டுகளாக முயன்று இயற்றிய இலக்கணம் சார்ந்த குறிப்புக்களனைத்தையும் மல்லாதி சூரியநாராயண சாஸ்திரியார் கேட்டதும் கொடுத்துவிடுவாரா! அதனால்தான் இக்கால இலக்கிய அரங்கத்தில் 'அறியவொண்ணாத சக்தியாக' அவர் நிலைக்கலானார்.

# அத்தியாயம் ஐந்து

## தற்கால இலக்கியம், கிடுகுவின் பேராற்றல்

தெலுங்கு இலக்கியத்தில் கவிஞர்களுக்குக் கிடைத்த பெயர், புகழ், பெருமைகள் ஆராய்ச்சியாளர்களுக்கு வரவில்லை. ஆயினும் கிடுகு அவர்கள் செயல் வேறு.

'1910ஆம் ஆண்டுக்குப் பிறகு ஆந்திர சாகித்தியம் கிடுகுவின் யுகம்' எனச் சொன்னவரு முளர்.

சீதாபதியார் (1968) "வழக்கு மொழிப் புரட்சி யாளராகாவிடினும், புத்திலக்கிய நடையமைப்புக்கள் வந்தனவாயினும் இத்தனை விரைவாக இக்கால இலக்கிய நடையமைப்புக்கள் பேரெழுச்சி பெற்றிருக்கவில்லை. ஏனெனில் இதுவரைக்கும் காவிய நடையென நிலைபெற்றுவிட்ட நூல் மொழிநடை அந்நாட்களிலேயே தற்காலக் கவிஞர்கள் மீதும் ஆழ்ந்த தாக்கத்தைக் காட்டியது. வழக்கு மொழிப் புரட்சி வந்தமையாலேயே இளங்கவிஞர்கள் (இளம் எழுத்தாளர்கள்) செயற்பாடுகளில் உரிமை மிகவும் கிடைத்தது," என்றார். (காண்க பக்கம் 149).

பந்துலு அவர்களின் மொழித்தாக்கம் பெறாத எழுத்தாளர் அந்நாட்களில் இல்லை எனக் கூறலாம். செள்ளப்பிள்ளை வெங்கடசாஸ்திரி தமது செயற் படைப்புக்களிலும், கட்டுரையாக்கங்களிலும் நடைமுறை மொழியைப் பயன் பெறச் செய்ததனுடனின்றி ராமமூர்த்தியாரின் கோட்பாடுகளைப் பிரசாரம் கூடச் செய்யலானார்: "தெலுங்கிலுள்ள இலக்கண விளக்கம் குறைவு," என்றதும் அவர்தான். கவிஞரின் படைப்பு முறைகளை நமக்குப் புகலிடமெனக்கூட ஒப்புக் கொள்ளலானார் அவர். அவரின் மாணாக்கர் சத்தியநாராயணா போன்றவர்கள் கூட,"தெலுங்கு சரஸ்வதி நோன்புப்படைப்பாக" ராமமூர்த்தியாரைப் புகழ்ந்துரைத்தார். கின்னரசானியார் பாடல்களில் விஸ்வநாதா வழக்குமொழியைப் பயன்பெறச்

செய்தார். 'ராமாயண கல்ப விருக்ஷம்' நூலில் சொற்கள் இலக்கிய வடிவமானவையே யாயினும் உரை நடைமட்டும் வழக்கு மொழியிலானதே.

இந்நூற்றாண்டின் நாற்பதாண்டுகளில் புதுவடிவ இலக்கியம் முன்னாலிருந்த 'இளம்புலமை'யிலிருந்து வெளிப் பெற்று ஒரு பிரிவினைத் தோற்றுவித்தது. 1934இல் பிறந்த 'பெருநிலைமாற்றத்துடன் ஸ்ரீ ஸ்ரீவிஸ்வநாத சத்யநாராயணா அவர்கள் உருக்குலைந்த 'புரட்சிக் கவிதைகளின் யுகத் தலைவரா'னார்.

"பெருநிலைமாற்றக் கீதங்களுக்குக் காரணம் எவரெனில், மொழிக்குத் தொடர்புள்ள வரைக்கும் கிடுகு அவர்களே என்பேன். பெரு நிலைமாற்றம் முற்றிலும் வழக்கு மொழியில் நிறைவேறிய உரைநடை", என ஸ்ரீரங்கம் ஸ்ரீநிவாசராவ் அவர்களும் ராமமூர்த்தியாரின் பெருமையைத் தெளிவுறக் காட்டலானார்.

1951இல் கெ.வி.ரமணா ரெட்டியார் 'கலை நிறையறிஞரின் சொற்போர்'களைக் கண்காணித்தவாறு கிடுகு அவர்கள் எவ்வாறு எழுதவேண்டுமெனச் சொன்னாரே யன்றி, என்ன எழுதவேண்டு மென்பதைச் சொல்லவில்லை. உண்மையே! ராமமூர்த்தியாரைச் சுற்றிச் சூழ்ந்திருந்த இலக்கியம், இலக்கிய அரசியல் மீதும் அரசியல் இலக்கியத்தின் மீதும் அப்பாராவ் ராமமூர்த்தியாருக் கிருந்த நோக்கங்கள் 'புரட்சிகரமானவை'யல்ல. ஆயினும் தெளிவான புரட்சிக்கு ஊக்கமூட்டுபவையாயின் 'மக்கள் கல்வி' எனப் பந்துலு அவர்கள் கோரியது பொருளிலும் உருவகத்திலும் இலக்கியத்திலும் மாற்றம் கொண்டுவரும் கல்வி முறையே.

அதனாலேயே இந்நாளில் கதர், வங்கபண்டு பிரசாதராவ், அல்லம் ராஜய்யா, சிவசாகர் முதலான மக்களெழுத்தாளர்கள் மக்கட்கலை உருவாக்கங்களைக் காட்டியிருப்பினராயின் ராமமூர்த்தியார் தமது போராட்டம் நிறைவேறியதென உளநிறைவடைந்திருப்பார்.

ஒரு முறை, கல்வி நிலையங்களில் மகன் வழக்குமொழி நடையில் எழுதினால்,'ஓகோ பர்லாகிமிடி காற்று வீசுகிறது போலும்,' என இழிநகை புரியலாயினர். இன்று பல்கலைக்கூடங்களில் பிஎச்.டி. ஆய்வுக் கோட்பாட்டு

இலக்கியங்களைக் கூட மிக நன்றாக வழக்குமொழி நடையிலேயே எழுதுகின்றனர்.

ராமமூர்த்தியாரின் இறுதி வேண்டுகோளினை அளிக்க வழி செய்த என்.ஜி. ஆச்சார்யா, தாபீ தர்மாராவ், நார்ல வேங்கடேஸ்வரராவ், கொடவடிகண்டி குடும்பராவ் முதலான பத்திரிகை எழுத்தாளர்கள், வெளியீட்டாசிரியர்களின் ஆழ்ந்த அக்கறையினாலேயே, இந்நாளில் தெலுங்கினத்தவர் விழிப்படையலாயினர்.

கிடுகு அவர்கள் இக்கால இந்திய இலக்கியப் படைப்பாளர்களில் ஒருவராக நிலையாய இடம் பெறலானார். இக்காலப் புதுமை இலக்கியப் பேரறிவாளர் அப்பாராவ் அவர்களை நினைவுகூரும் போதெல்லாம் ராமமூர்த்தி நண்பரும் கூட எப்பொழுதும் எண்ணத்தில் மிதந்து காண்கிறார்.

"தொன்றுதொட்டே முனிவர்களின் பிறந்த மண்ணான இந்தப் பாரதத் திருத்தலத்தில் இப்பொழுதும் முனிவர்கள் தோன்றிக் கொண்டிருக்கின்றனர். முனிவரில் மாண்புடைய அத்தகையப் பெருமகனாரிடையில் ஒருவர் ஸ்ரீகிடுகு ராமமூர்த்தி பந்துலு அவர்கள்....

"....பிற மாகாணத்தவராயினும், பிற நாட்டவராயினும் நமது தெலுங்குத் தாய் ஈன்ற அரிய நன்மகனாரின் பெயரைச் சொல்லுமாறு கேட்பின் நாம் தயக்கமின்றி, 'இதோ, கிடுகு ராமமூர்த்தி' எனக்கூறுவோம். 'அவர் எங்கிருக்கிறார்' என வினவினராயின் வானினை நோக்கிப் பெருமிதத்துடன் பார்த்து, ஒரு துளி கண்ணீரை மல்குவோம்."

நோரி நரசிம்ம சாஸ்திரி, பிரதிபா (1940).

# இலக்கியப் பட்டியல்
## கிடுகு ராமமூர்த்தியாரின் படைப்புக்கள்

(தேர்ந்த சில)

### ஆங்கில இலக்கியங்கள்

1. The Savara / Telugu / Telugu-Savara Texts, (1911), Government Press, Madras.
2. A Memorandum on Modern Telugu, (1913), Vavilla Publications, Madras.
3. A Manual of Sora Language, (1931), Government Press, Madras.
4. English-Sora Dictionary, (1933), Government Press, Madras.
5. Sora-English Dictionary, (1938), Government Press, Madras.
   (The print) Mittal Publication, New Delhi, (1986).

### மொழியாக்கம் (தெலுங்கில்)

6. A Shorter English Grammar, (by Otto Jesperson), (1914), not published,

### ஆங்கிலக் கட்டுரைகள்

7. 'State of Education among the Savaras,' Journal of Madras Christian Literary Society, (Sept., 1894).
8. 'An Account of Antiquities of Mukhalingam and its Neighborhood,' Madras Journal of Education and Science, (1894).
9. 'Introduction' to 'Telugu Journal,' (1-1; 1919).
10. 'How to approximate Written and Spoken Telugu,' in Telugu, (Vol. 12:1920).

11. 'Freedom to use the Current Language' in Vyasavali, (1933), (pp. 125-130)
12. 'Who can fix a Living Language?' in Vyasavali, (pp. 31-141).
13. 'Popular Literature' - I ibid (pp. 142-154).
14. 'Popular Literature' - II ibid (pp. 155-162).
15. 'Popular Literature' - III ibid (pp. 163-173).

## தெலுங்கு நூல்கள்

16. *'நிஜமான சம்பிரதாயம்,' வாவிள்ளா வெளியீடு, மதராஸ் (1914).*
17. *'கத்யசிந்தாமணி,' தெலிகிசர்வ வெங்கடரத்தனம் (வெளியீடு) சப்ததிம தினோத்சவ பிரசுரங்கள், ராஜமண்டிரி (1933).*
18. *'பாலகவிசரண்யம்' தெலிகிசர்வ வெங்கடரத்தனம் (வெளியீடு) சப்ததிம தினோத்சவ பிரசுரங்கள், ராஜமண்டிரி (1933).*
19. *'ஆந்திர பிஷுக்குகளின் பாஷா பேஷஜம்' தெலிகிசர்வ வெங்கடரத்தனம் (வெளியீடு) சப்ததிம தினோத்சவ பிரசுரங்கள், ராஜமண்டிரி (1933).*
20. *'வியாசாவளி' தெலிகிசர்ல வெங்கடரத்னம் (வெளியீடு) சப்ததிம தினோத்சவ பிரசுரங்கள், ராஜமண்டிரி (1933).*
21. *'சூர்யராயாந்திர நிகண்டு விமர்சனம்' (1938) (18-21 நூல்களை விசாலாந்திர பிரசுராலயம், 1958லிருந்து மறுபதிப்பு அச்சாக்கியது.)*

## பீடிகைகள் ஆசிரியர் உரைநூல்

22. *பசுமர்த்தி கிருஷ்ணமூர்த்தி, 'கிருஹலக்ஷ்மி கண்டாபரணம்.'*
23. *குடிபாடி வெங்கடசலம், 'சித்ராங்கி.'*
24. *யல்லாபந்துலு ஜகந்நாதம், 'தரணோபாயம்.'*

25. யல்லாபந்துலு ஜகந்நாதம், 'காதெலகண்டடு கொண்டல மிண்டடு.'
26. குள்ள பல்லி நாராயாணமூர்த்தி, 'ஆந்திர ஜோதி.'
27. தேகுமள்ள காமேஸ்வரராவ், 'வாடுக பாஷரசனகு கொன்னி நியமாலு.'
28. வேட்டூரி பிரபாகர சாஸ்திரியாருக்கு *(1924-28)*
29. 'வஜ்ராயுத' இதழாசிரியருக்கு *(1925)*
30. 'பிரபுத்தாந்திரா' இதழாசிரியருக்கு *(1937)*
31. 'தெலுகு பத்ரிகா' இதழாசிரியருக்கு *(1935)*
32. 'வீணா' இதழுக்கு *(1937)*

## கட்டுரைகள்

33. *'கிராம்ய பதப் பிரயோகம்' ஆந்திரபாரதி, (2-12, மே 1912).*
34. *'நேடி தேட்ட தெலுகு', ஆந்திர பத்ரிகா ஆண்டிதழ் (1913)- (இன்றைய தெளி-தெலுங்கு)*
35. *'கிராம்ய பாஷ காது, வாடுகபாஷ' (நாட்டுமொழியன்று, வழக்குமொழி), திரிலிங்க (1-7; ஜுலை,1974)*
36. *'தெலுங்கு, ப்ராத-க்ரொத்த' (தெலுங்கு, பழமை-புதுமை) திரிலிங்க (மார்ச், 1914)*
37. *'ப்ராதெனுகு கமம்', (பண்டைத் தெலுங்கின் பண்பு) ஆந்திரசாகித்திய பரிஷத் பத்திரிகை, (2-3; 1914; 256-275)*
38. *'வின்னபமு' (விண்ணப்பம்), தெலுங்கு (1-1;1919)*
39. *'சின்னயசூரி நீதி சந்திரிகா, தெலுங்கு, (1-1;1919)*
40. *'மித்யாபவாதமு' சாரஸ்வத சர்வஸ்வம், (அறியாமைப் பழிச்சொல்) (1-7; 1924)*
41. *'வ்யவஹாரிக பாஷா பஹிஷ்கார நிரசனம்', (வழக்குமொழி பயன் ஒதுக்கக்கேடு), ஆந்திர பத்திரிகா ஆண்டிதழ்,(1924)*
42. *'ராஜராஜு காலமந்துன்ன தெலுங்கு பாஷா' (ராஜராஜர் காலத்துத் தெலுங்கு மொழி), (ராஜராஜ நரேந்திர முடிசூட்டுவிழா மலர், (1924)*

43. 'நேட்டி சாஹித்யமு', பிரதிபா இதழ், (1-4;1937)
(இன்றைய இலக்கியம்)
44. 'ஸ்ரீதிருப்பதி வெங்கடேஸ்வருல ப்ரசம்ஸ',
(ஸ்ரீதிருப்பதி வெங்கடேஸ்வரரின் பெருமை)
கிருஷ்ணா பத்ரிகா, (7-10;1937)
45. 'துதி வின்னபமு' (இறுதிவேண்டுகோள்),
பிரஜாமித்ரா இதழ், (ஜனவரி,1940)

## துணையாய சான்றுநூல்கள்:

46. 'கிடுகு ராமமுர்த்தி பந்துலுவின் வாழ்க்கை வரலாறு',
காள்ளூரி சூர்யநாராயண, (1955), வாவிள்ளா
வெளியீடு, சென்னை.
47. 'ராமமூர்த்தி பந்துலுவின் வாழ்க்கை வரலாற்றில்
சித்திர விசித்திர கட்டங்கள்', கிடுகு வெங்கடசீதாபதி,
(1941), ஆந்திர பத்திரிகை ஆண்டிதழ்.
48. 'கதகாலபு ஸ்மிருதுலு'
(கடந்தகால நினைவுகள்), கிடுகு வெங்டசீதாபதி,
(1914) கிருஷ்ணா பத்ரிகா.
49. 'சாஹித்யோபந்யாஸமுலு' (இலக்கியச்
சொற்பொழிவுகள்),கிடுகு வெங்கடசீதாபதி,(1964),
ஆந்திரப்பிரதேச சாகித்திய அக்காடெமி வெளியீடு,
ஹைதராபாத்.
50. 'தெலுங்குசாஹித்ய சரித்ர'
(தெலுங்கு இலக்கிய வரலாறு), கிடுகு
வெங்கடசீதாபதி,(1968), சாகித்திய அக்காதெமி,
புது டில்லி.
51. 'சவரர்கள்' ஜி.வி.ராமமூர்த்தி, (1972),
தேசீ புத்தக வெளியீட்டாளர், விஜயவாடா.
52. 'கிடுகு ராமமூர்த்தி', ஜி.வி.ராமமூர்த்தி(1976),
(வாழ்க்கை வரலாறு), ஆந்திரப்பிரதேசச் செய்தி
மற்றும் மக்கள் தொடர்புத்துறை வெளியீடு,
ஹைதராபாத்.
53. 'மரோசாரி கிடுகு ராமமூர்த்தி ',
(மீண்டுமோர் முறை கிடுகு ராமமூர்த்தி)

சேகூரி வெங்கடரத்னம், (1986),
ஹைதராபாத் புத்தக நிறுவன வெளியீடு,
ஹைதராபாத்.
54. 'சம்பாதகீய பூமிகா'
(தொகுப்பாசிரியரின் முன்னுரை),
தெலிகிசர்ல வெங்கடரத்னம், (1933),
(பிறந்தநாள் விழா வெளியீட்டிற்கென)
55. 'வியாச சங்கிரஹம்'
(கட்டுரைத் தொகுப்பு), தெலிகிசர்ல வெங்கடரத்னம்,
(1933) (ராமமூர்த்தியாரைப் போற்றும் கட்டுரைக்
கோவையிலிருந்து)
56. 'சாஹித்யோபந்யாஸமுலு'
(இலக்கியச் சொற்பொழிவுகள்), (1964),
ஆந்திரப் பிரதேச சாகித்திய அக்காடெமி வெளியீடு,
ஹைதராபாத்.
57. 'ராமமூர்த்தி பந்துலுவுடன் முப்பத்தாறு மணிகள்,'
ஸ்ரீபாத சுப்ரமண்ய சாஸ்திரி,
(1935), பிரபுத்தாந்திரா இதழ், 'அப்யுதயம்,'
(பக்கம்1-13; டிசம்பர், 1980).
58. 'அநுபவாலு-ஞாபகாலு,' ஸ்ரீபாத சுப்ரமண்ய சாஸ்திரி,
(1958) கலாவர்த்தினி பரிஷத், ராஜமண்டிரி.
59. 'கிடுகு ராமமூர்த்தி பந்துலுவின் மொழி இலக்கியச்
சேவை,' பிஎச். டி. ஆராய்ச்சிக் கோட்பாட்டு நூல்,
சாதவல்லி சந்திர சேகர், (1987), ஸ்ரீவெங்கடேஸ்வரா
பல்கலைக் கழகம், திருப்பதி, (உரையாக்கம்)

## கிடைக்கப் பெற்ற உரைநூல்கள்:

60. 'வியாச சந்திரிகா,' குரஜாட வெங்கட அப்பாராவ்,
(1957), விசாலாந்திரா பிரசுரம், விஜயவாடா.
61. 'லேகலு,' (கடிதங்கள்), குரஜாடா வெங்கட
அப்பாராவ், (1958), விசாலாந்திரா பிரசுரம்,
விஜயவாடா.
62. 'கிடுகு அவர்களின் கடிதங்கள்,' வேட்டூரி
ஆனந்தமூர்த்தி, (1982), மணிமஞ்சரி பிப்ரவரி இதழ்,
பிரபாகர பரிசோதக மண்டலி, ஹைதராபாத்.

63. 'சாஸனப் பரிசோதகராக கிடுகுவும் குரஜாடாவும்,' ஆருத்ரா, (1986), (காண்க: இலக்கியப் பட்டியல், பக்கம் 53; 80–84)
64. 'என் இலக்கிய வரலாற்று நண்பர்கள்,' தேகுபள்ளி காமேஸ்வரராவ், (1966), (இந்நூலில் காண்க: பக்கம் 53, 163–169)
65. 'தெலுகு பாஷா சரித்ர,' (தொகுப்பு), பத்திரி ராஜு கிருஷ்ணமூர்த்தி, 1975, ஆந்திரப் பிரதேச சாகித்திய அக்காடெமி, ஹைதராபாத்.
66. 'கிடுகு நினைவுக் குறிப்பறிக்கை: குரஜாடாவின் மறுப்பறிக்கை,' பேரங்கி தக்ஷிணாமூர்த்தி, (காண்க: பக்கம் 53; 119–125)
67. 'வியவஹாரிக பாஷோத்யம நேபத்யம், கிடுகு வாரி சாரத்யம்,' (நடைமுறை மொழிப்புரட்சி எழுச்சி, கிடுகு அவர்களின் தேரோட்டம்), தூமாட்டி தோணப்பா, (அக்டோபர், 1986), தெலுங்கு ஆராய்ச்சி மாணாக்கர், காண்க: பக்கம் 53, 197–203).
68. 'ராலூரெப்பலூ,' (கல்லும் இமையும்), தாபீ தர்மாராவ், (1979), ஏடுகூரி பிரசாத், (தொகுப்பு), விசாலாந்திரா பிரசுரம், ஹைதராபாத்.
69. 'ராமமூர்த்தி பந்துலு,' நோரி நரசிம்மசாஸ்திரி, (1940), பிரதிபா, 4 (காண்க: 53, 183–187).
70. 'ஆந்திர பாஷா சரித்ரமு,' முதல், இரண்டாம் பாகம், சிலுகூரி நாராயணராவ், (1937), ஆந்திரவிஸ்வகளா பரிஷத், வால்தேர்.
71. 'எனது குரு அவர்கள்,' சிலுகூரிநாராயணராவ், (1940), பிரதிபா, 4 (காண்க: 53; 188–191).
72. 'குருவுக்கேற்ற சீடர்,' ஏட்டுகூரி பிரசாத், (1986), (காண்க: 53; 126–129).
73. 'தெலுங்கு மொழி இலக்கிய ஆராய்ச்சிகள், பிறப்பும் தொடக்க நிலைகளும்,' (காண்க: ஜி.வி. சுப்ரமண்யம் (முதல் காலநிலை) தொகுப்பு) (பக்கம்: 33-50.)
74. 'தெலுங்கு இலக்கிய ஆய்வுரை, மேலைநாட்டுத்தாக்கம்,' எச்.எஸ். பிரம்மாநந்தா, (1985) , அக்ஷர பிரசாரப் பிரசுரம், அனந்த புரம்.
75. 'தெலுங்கு இலக்கியத்துக்கு நன்னயாவின் அளிப்பு,' அக்ஷர பிரசாரப் பிரசுரம், அனந்தபுரம்.

76. 'நூறாண்டுத் தெலுங்கு நாடு,' கெ. கெ. ரங்கநாதாச் சார்யுலு, (தொகுப்பு,(1984), ஆந்திர சாரஸ்வத பரிஷத், ஹைதராபாத்.
77. 'களா பரிபூர்ணடு: வாக்யுத்தாலு,' (கலைநிறையறிஞர்: சொற்போர்கள்), கெ. வி. ரமணாரெட்டி, (1951), கின்னெரா, (பதிப்பு 3-2).
78. 'மஹோதயம்' (பெரும்விடிவு), கெ. வி. ரமணா ரெட்டி, (1969), விசாலாந்திரப் பிரசுரம், விஜயவாடா.
79. 'வியவஹாரிகா பாஷா விகாஸ சரித்ர,' (வழக்குமொழி வளர்ச்சி வரலாறு), அக்கிராஜு ரமாபதி ராவ், (1971), எம். சேஷாசலம் குழு வெளியீட்டாளர், மசிலீபட்டினம்.
80. 'சமஸ்கந்துலைன தண்ட்ரி கொடுகுலு,' (இணைத்திறமிக்க தந்தையும் தனயனும்), அக்கிராஜு ரமாபதிராவ், (1986) (காண்க; 53: 140-147)
81. 'வியவஹாரிக பாஷா விகாஸம்,' (வழக்கு மொழி வளர்ச்சி), பூதராஜு ராதா கிருஷ்ணா, (1972), விசாலாந்திரப் பிரசுரம், விஜயவாடா.
82. 'ஆதுனிகயுகம்: கிராந்திக வ்யவஹாரிக வாதாலு,' (புதுயுகம்: இலக்கிய வழக்கு மொழிக் கருத்துரைகள்), பூதராஜு ராதாகிருஷ்ணா, (1975). காண்க: ப. கிருஷ்ணமூர்த்தி, (தொகுப்பு: 264-294).
83. 'சங்க சம்ஸ்கர்த்தகா கிடுகு,' (சமுதாயத்தாளாளராக கிடுகு), அடப்பா ராமகிருஷ்ணராவ், (1986), (காண்க: 53; 101-108)
84. 'ராமமூர்த்தியார் வழக்கு மொழியாளராக ஏன்ஆனார்?' தேகூரி ராமாராவ், (1975) இக்கால இலக்கியப் படைப்பாளர்களின் கலைப் பேரவை, ஹைதராபாத். (பக்கம்: 36-43), காண்க: 53; 95-100.)
85. 'பாஷோத்யமாலு,' (மொழிப் புரட்சிகள்), சேகூரி ராமாராவ், (1984), ரங்கநாதாச்சார்யுலு (தொகுப்பு), (காண்க: 61-75)
86. 'கிடுகு ராமமூர்த்தி பந்துலு அவர்கள், என் அனுபவங்கள்,' சிரோமணி ஸ்ரீநிவாஸா, (1940), பாரதி இதழ், மார்ச், (காண்க: 53; 170-179).
87. 'தெலுங்கு காவிய மொழியின் மீது கிடுகு ராமமூர்த்தியின் ஆழ்ந்த ஊக்கம்,' ஸ்ரீ.ஸ்ரீ.,(1982), (காண்க: 53; 76-79)

88. 'தெலுங்கு சரஸ்வதி நோன்பினைப் பற்றி ஸ்ரீ கிடுகு ராமமூர்த்தி,' விஸ்வநாத சத்யநாராயணா, (1953), கிருஷ்ணா இதழ், ஜனவரி.

89. 'சவரர்கள்,' கிடுகு வெங்கட சீதாபதி, (1930), ராள்ளபண்டி சுப்பாராவ், (தொகுப்பு), வெள்ளிவிழா மலர், ஆந்திரப் பிரதேச சாகித்திய அக்காடெமி வெளியீடு, ஹைதராபாத்.

90. 'பரிசோதனை,' ஜி.வி.சுப்ரமண்யம், (1983), (தொகுப்பு), வெள்ளி விழா மலர், ஆந்திரப் பிரதேச சாகித்திய அக்காடெமி வெளியீடு, ஹைதராபாத்.

91. 'களிங்கநாட்டு வரலாறு,' ராள்ளபண்டி சுப்பாராவ், (1930), (தொகுப்பு), ஆந்திர இதிஹாச மண்டலி (ஆந்திர வரலாற்று மன்றம்), ராஜமண்டிரி.

92. 'ஆதுனிக ரசன, வாங்மய பரிணாமமு,' (இக்கால உரைநடை இலக்கியப் பண்பாட்டு வளர்ச்சி), நிடுதவோலு வெங்கடராவ், (1934).

93. 'கிடுகா! பிடுகா!' (கிடுகா! இடியா!), செள்ளப்பிள்ளை வெங்கடசாஸ்திரி, (1937), கிருஷ்ணா பத்திரிகை, மே, 15 , காண்க: 53; 148-159).

94. 'அப்யுதயா' (வழக்குமொழியரங்கின் சிறப்பு மலர்), ஆந்திரப் பல்கலைக் கூடத்தில் நிகழ்ந்த அரங்கச் சொற்பொழிவுகள்,(ஏப்ரல், 1980).

95. 'கிராந்திக வ்யவஹாரிக பாஷாவாத சூசிகா' (இலக்கிய வழக்கு மொழியுரையாடற் பட்டியல்), தெலுகு அக்காடெமி வெளியீடு, ஹைதராபாத்.

## English anthology:

96. 'Language Movements in India, E. Annamalai, (1979), Central Institute of Indian Languages Publication, Mysore.

97. 'Preface to Kanyasulkam,' G.V. Apparao, (1897), First Edition.

98. 'Minute of Dissent to the Report of the Telugu Composition Sub Committee, G.V. Apparao, (1914), Vavilla Publication, Madras.

99. 'Diglossia,' reprint in Dell Hymes, (ed) ' Language in Culture and Society,' Harper and Row, New York, (1964) (pp 429-439)

100. 'Linguistic Survey of India,' (Vol I), Sir George A Grierson, (1927), Motilal Banarsidas (reprint), New Delhi.

101. 'Language, Its Nature, Development and Origin,' Otto Jesperson, (1922), George Allen and Unwin Ltd., London, (reprint) (1968) (pp330).

102. 'Classical or Modern, a Controversy of Styles in Education in Telugu,' E. Annamalai (edition), (pp 1-24).

103. 'Some Indian Tribes,' Nirmal Kumar Bose, (1972), National Book Trust Publication (reprint: 1982).

104. 'A Defense of Literary Telugu,' J. Ramaiah Pantulu, (1913), Addison & Co., Madras.

105. 'Ramamurthi: A Munda Linguist's Appreciation, Stanley Starosta, (1980), (see 53: 211-217).

106. 'Life or Death: A Plea for Vernaculars,' P.T. Sreenivasa Iyengar, (1912).

107. 'Castes and Tribes of South India,' E.H. Thurston, (1909), Vol. IV.

108. 'Reminiscences' in T. Venkataratnam, J.A. Yates, (1933), ed. (22-26), (see: 53; 218-222.)

# ராமமூர்த்தியின் வாழ்க்கையில் குறிப்பிடத்தக்க நாட்கள்

29-8-1863 பிறப்பு (தந்தை: வீரராஜு பந்துலு; தாய்: வெங்கம்மா)

1868 எழுத்தறிவித்தல்

1874 உபநயனம்

1875 வீரராஜுவின் இறப்பு

1879 பத்தாம் வகுப்பு முடித்தல், அன்னபூர்ணம்மாவுடன் திருமணம்

1880 பர்லாகிமிடியில் துணையாசிரியராகப் பணியேற்பு

25-1-1885 சீதாபதி பிறப்பு

1887 எஃப்.ஏ யில் தேர்ச்சி

1889 சவர இனத்தவருடன் அறிமுகத் தொடக்கம்

1892 பி. ஏ. யில் ஆங்கிலம், சமஸ்கிருதம் தேர்ச்சி நாராயணதேவுக்கு போதகராகப் பணியேற்பு

15-1-1893 முகலிங்கம் திருத்தலங் காணல்

1894 சவரமொழி வளர்ச்சிக்கென அறிக்கை அனுப்பல்

1896 பி. ஏ. வரலாற்றுப் பாடத்தேர்வில் இரண்டாம் நிலை.
கல்லூரியில் ஆசிரியராகப் பணியேற்பு

1906 ஜெ.ஏ. ஏட்ஸுடன் அறிமுகத் துவக்கம்.

1908 வெல்ஷ்மன் கிடுகு அவர்களிடம் சவரமொழி கற்றமை துவக்கம்.

1910 விசாகப்பட்டினம் ஆசிரியர்களரங்கில் விளக்கவுரை யாற்றல்.

12-11-1911 பணியிலிருந்து விலகல், 'கௌரவச் சான்றிதழ்' அரசாங்கம் அளித்தல், சவர-தெலுங்கு நூல் வெளியிடல்.

1-1-1913 'ராவ் சாஹெப்' விருது வழங்கப் பெறல், விஜயநகரில் துணை போதகராகப் பணி ஏற்பு, 'பிராதெலுகு கம்ம,' நினைவுக் குறிப்பறிக்கை வரைதல், தெரங்கோவில் சவரமொழிப் பாடசாலை துவக்கம்

1914 பர்லாகிமிடிக்குத் திரும்பிவருதல், 'உண்மையான மரபு நெறிகள்' உரையாக்கம், நாடு சுற்றத் தொடங்கல்.

1917 வெல்ஷ்மன் மறைவு.

1919 'தெலுகு' பத்திரிகை தொடக்கம் (1920 வரை)

1920-1926 தெலுங்குமொழி இலக்கிய ஆராய்ச்சிகள்.

1928 மிஸ் மன்றோ சவரமொழி கற்கத் தொடங்கல்.

1929 செரங்கோவில் சவரமொழி ஆய்வுக் கூடத்துக்கு வெல்ஷ்மனின் பெயரிடப்பெறல்

1931 சொரமொழியின் தொகுப்புநூல் வெளியிடல்.

1-1-1933 ஆங்கில சொரமொழி அகராதி வெளியிடல் 'கெய்ஸர்-இ-ஹிந்த்' பொற்பதக்கப் பரிசு பெறல்

27-12-1933 எழுவகைப் பிறந்தநாள் விழாக்கள், பாலகவி சரண்யம், பாஷா பேஷஜம், வியாசாவளி, வியாச சங்கிரஹம் ஆகிய வெளியீடுகள், சீதாபதி லண்டன் செல்லுகை.

1934 பாரதீ தீர்த்த சபையினரால் 'மஹா மஹோபாத்யாயா' விருது வழங்கப்பெறல்.

6-5-1935 வெள்ளி விழாப் பதக்கம் பெறல்.

1-4-1936 ஒரிசா மாநிலம் அமையப் பெறல். பந்துலு அவர்கள் பர்லாகிமிடியை விட்டுச் செல்லல்.

1938 ஆந்திரப் பல்கலைக் கூடத்தினால் 'கலா பரிபூர்ணா' விருது பெறல். சூர்யராயாந்திர அகராதி விளக்கவுரை நூல் வெளியிடல்.

4-1-1940 தாய் தந்தையருடன் சீதாபதி மீளச் சேர்தல்.

15-1-1940 பிரஜாமித்ரா அலுவலகத்தில் 'இறுதிப் பேருரை.'

17-1-1940 பந்துலு அவர்கள் தம் தந்தையாருக்காற்றிய கடைசி நினைவு நாள்

22-1-1940 காலை 7.20 ராமமூர்த்தி உயிர் பிரிவு.

1942 அன்னபூர்ணம்மா இறப்பு.

1969 சீதாபதி மறைவு.

"எளிய மக்கள் முன்னேற்றமடைய வேண்டும் என்ற கருத்தில் எமக்கு நம்பிக்கை உண்டு. ஏழைகளிடமும் செல்வர்களிடமும் அறிவியல் விளக்கேற்றி ஒளிரச் செய்ய மொழியின் செயலாக்கத்தினை மிஞ்சிய சாதனம் உள்ளதா ? நம் சிறார்களுக்கு உயர்ந்த இலக்கியமில்லாமை குறையாக உள்ளது. நமது பெண்டிரின் தூய கற்பனை இலக்கியத்திற்கென ஏங்கியுள்ளனர். கல்வியென்றால் வகுப்பறையில் மட்டுமே என்பதாகாது. வளர்ச்சி மேம்பாட்டையளிக்கும் இலக்கியம் வாழ்க்கையில் எல்லாத்துறைகளிலுமே தேவை!"

– கிடுகு ராமமூர்த்தி

('தெலுகு' நாளிதழ்த் தொகுப்புரை)

ஸ்ரீ கிருஷ்ண தேவராயப் பல்கலைக் கழகம் ஆந்திர மொழியியல் தலைவரான டாக்டர் எச்.எஸ். பிரம்மாநந்தா 1950 செப்டம்பர் பத்தொன்பதாம் நாளில் பிறந்தார். அவர் அன்றாட ஆராய்ச்சியாளர். பிஎச்.டி. பட்டம் பெற்றதுடன் உளநிறைவடையாமல் நிலையாகத் தொடர்ந்து உரையாக்கம் செய்தவாறுள்ளவர். நாட்டுப்புற மக்களிலக்கியம், மலை வாழ் மக்கள் மொழியியலாய்வு, அவரின் ஆர்வமிக்க முக்கிய துறைகள். ஆந்திரப் பிரதேச சாகித்திய அக்காடெமி மும்முறை இவரது இலக்கியங்களைச் சிறந்தவையெனத் தேர்ந்தெடுத்தது. அவர் வரைந்த நூல்கள் ஆறு. அவற்றுடன் வெளியிடப் பெற்ற ஆராய்ச்சிக் கட்டுரைகள் நூற்றிரண்டு. அஃதுடனன்றி அவர் பாடகரும், இசைக்கருவிகள் வாசிப்பவருமாவார்.

இந்நூலை மொழிபெயர்த்துள்ள என். தட்சிணாமூர்த்தி அய்யா கல்வித்துறையில் மாநில முதியோர் கல்விக் கவுன்சில் செயலராக,ஆங்கில மொழி ஆசானாக, கல்வி, சமுதாயநலம், மொழி,மொழியியல், இலக்கய அமைப்புகளின் நிறுவனராகவும், முதியோர் கல்விக்கென மத்திய அரசின் சிறந்த நூல்களின் மொழி பெயர்ப்பாளராகவும், எழுத்தாளராகவும், ஆலோசகராகவும் பணியாற்றியவர்.

**Gidugu Venkataramamoorthi (Tamil)** **Rs. 25/-**
**ISBN 81 - 260 - 0587 - 4**